## வசீலி கொலீஷ்கின்

# கடலோர “குழந்தைகள் குடியரசு”






ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



விற்பனையாளர்கள்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
சென்னை



# சூரிய ஒளி எப்போதுமே இருக்கட்டும்!

மொழிபெயர்ப்பாளர்: நா. முகம்மது செரீபு, எம். ஏ.
வடிவமைப்பாளர்: வசீலி ஷில்ஜேன்கோ
பதிப்பாசிரியர்: எ. கனவாலொவ்

டாஸ் புகைப்படங்களும் வர்ண சிலைடுகளும்:
செர்கேய் வீதவ்
வலேரி கிறிஸ்தஃபோரவ்
விளதீமிர் லக்ரான்ஜா
விக்தர் ரூசெவ்
ஃபேலிக்ஸ் துனயேவ்ஸ்கி
யூரி மெஸ்னியான்கின்
அலெக்சாந்தர் அபுகோவ்ஸ்கி மற்றும் பிறரும்

**В. Голышкин**
У САМОГО СИНЕГО МОРЯ
*На тамильском языке*

**V. Golyshkin**
THE SEASIDE "CHILDREN'S REPUBLIC"
*In Tamil*



ISBN 5-05-002026-3

# ஹலோ, நான்தான் ஆர்தெக்!

என்னுடைய பெயர் ஆர்தெக். ஜூலை 16, 1925இல் நான் சோவியத் யூனியனில் பிறந்தேன். அதே ஆண்டில் பிறந்த மக்கள் அநேகமாக இப்போது ஓய்வு பெற்றிருக்க லாம். அவர்கள் பாட்டிகளாகவும் தாத்தாக்களாகவும் இருக்கிறார்கள், நானோ இந்தப் புத்தகத்தைப் படிக்கிற ஏராளமான சிறுவர்களையும் சிறுமிகளையும் போல இளமையோடு இருக்கிறேன். இந்த ஆண்டுகளில் நான் வயது சென்றவனாகவில்லை, வளர்ந்து வளமிக்கவனாக மாறியிருக்கிறேன். ஓர் ஆண்டில் எட்டு மில்லியன் செலவு செய்ய என்னால் முடியும், ஆகவே நீங்கள் என்னைப் பார்க்க வந்தால், வருத்தப்பட மாட்டீர்கள். வருவதற்காக நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டால், நீங்கள் அதிர்ஷ்டக்காரர் கள் தாம். இங்கே நேரத்தைச் செலவிட விரும்பும் சிறார்கள் ஏற்கெனவே நிறைய உள்ளனர், இந்தப் புத்தகத்தைப் படித்த பிறகு மேலும் ஆயிரக்கணக்கானோரும் என்னுடைய அழைப்பைப் பெறுகின்ற வாய்ப்பினை அடைய விரும்புவார்கள். நான் லட்சாதிபதியாக இருந்தாலுங்கூட, தேவைக்கேற்ப விரைவாக வளர்த்துக் கொள்ள என்னால் முடியாது.

நான் மிகவும் ஆரவாரமற்ற முறையில் தொடங்கினேன். எனது முதலாவது விருந் தினர்கள் — எண்பது இளம் பயோனீயர்கள்* — கூடாரங்களில் வசித்தனர். கடற்கரை நெடுகிலுள்ள சிறிய, சமதள நீள்வரித் துண்டு நிலத்தில் எட்டுக் கூடாரங்கள் இரண்டு வரிசைகளில் அமைந்திருந்தன. அவற்றையடுத்துக் கூட்டங்களுக்காகவும் அணிவகுப்பு களுக்காகவும் இடமிருந்தது. அதற்கும் சற்று தள்ளி விளையாட்டுத் திடல் இருந்தது. முகாமில் இரண்டு சிறிய கட்டடங்கள் இருந்தன. ஒன்றில் சமையலறையும் உணவறை யும், மற்றொன்றில் நூலகம், மற்றும் மருத்துவருடைய அலுவலகம் இருந்தன. அந்த ஆரம்ப ஆண்டுகளில் ஆர்தெக்கிற்கு வந்த குழந்தைகளில் அநேகம் பேர் மோசமான

* **இளம் பயோனீயர்கள்** — பத்து முதல் பதினைந்து வயது வரையிலான சிறுவர்களுக்கும் சிறுமி களுக்குமான சோவியத் தேசிய இளைஞர் அமைப்பு. — ப-ர்.

அறுபது ஆண்டுகளுக்கு முன்னால் முதன் முறையாகத் திறக்கப்பட்ட போது ஆர்தெக் இப்படித்தான் காணப்பட்டது. ஒவ்வொன்றும் புதிதாக இருந்தது. பல முதலானதாகவும் இருந்தன: முதலாவது இளம் பயொனீயர்கள், முதலாவது கூடாரங்கள், முதலாவது அணிவகுப்புகள், முதலாவது முகாம் தலைவர்கள்.








உடல்நலத்துடனும், மருத்துவக் கவனிப்புத் தேவைப்படுபவர்களாகவும் இருந்தனர். அந்தக் காலத்தை நினைவுகூருகிற லெனின்கிராடைச் சேர்ந்த பெண் ஒருத்தியின் கடிதத்தைக் காப்பாற்றி வைத்திருக்கிறேன். ''கிரீமியாவில் உள்ள ஆர்தெக்கிற்குப் போகும் முதலாவது முகாம்காரர்களில் ஒருத்தியாக இருப்பேன் என்பது முன்னாளைய பெத்ரோகிராடு உழைப்பாளி மாவட்டத்திலிருந்து சிறுமியாகிய எனக்கு எவ்வளவு அற்புதமாக இருந்தது! அங்கே பயணம் போக எங்களுக்குச் சில நாள்கள் பிடித்தன என்பதை நினைவு வைத்திருக்கிறேன். நாங்கள் எல்லாருமே தலைமுடியைக் குட்டையாகக் கத்தரித்துக் கொண்டோம், அதிகச் சுமையுமில்லை — வைக்கோல் கூடைகளோ சிறிய பயணப் பைகளோ வைத்துக் கொண்டோம். முகாமில் வெறுங்கால்களுடன் நாங்கள் நடந்து, பயணங்களுக்காகவும் வீடு திரும்பிச் செல்வதற்காகவும் எங்களது காலணிகளைப் பாதுகாத்தோம். கூடாரங்களில் வசித்தோம், மெத்தையற்ற படுக்கைகளின் மீது தூங்கினோம்.'' மாலை நேரங்களில் குழந்தைகள் பாரஃபின் விளக்குகளை ஏற்றினார்கள். அந்த நாள்களில் ஏராளமாக இருந்த ஒரே பொருட்கள் சூரியனும் கடலுந்தான்.

அந்த முதலாம் ஆண்டுகளில் இங்கே பிறந்த மரபுகள், பழைய, அநுபவமிக்க புரட்சியாளர் ஸினோவி பெத்ரோவிச் சலவியோவின் பெயரோடு தொடர்பு கொண்டிருக்கின்றன. அவரைக் குழந்தைகள் 'பயொனீயர் குடியரசின் ஜனாதிபதி' என்று அழைத்தனர். முகாமுக்கான இடத்தைத் தேர்ந்தெடுத்தவர் அவர்தான். மாலை நேரங்களில், எல்லாரும் நெகிடியைச் சுற்றிக் குழுமியிருக்கும் போது, ருஷ்ய உழைப்பாளி மக்களின் மாபெரும் தலைவரான விளதீமிர் இலியீச் லெனினைப் பற்றியும், அவரது குடும்பத்தைப் பற்றியும், புரட்சி வீரர்களைப் பற்றியும் சலவியோவ் கதைகள் கூறுவார். குழந்தைகளுடன் சேர்ந்து பாடவும் அவர் விரும்புவார்.

எனது உடைமைகள் பெருகின, ஆனால் இரண்டாம் உலகப் போர் பெரும் நாசத்தை ஏற்படுத்தியது. **1944**, ஏப்ரலில் கிரீமியாவின் விடுதலைக்குப் பிறகு, ஆர்தெக்கிற்குத் திரும்பியவர்கள் இடிபாடுகளுடன் என்னைக் கண்டனர் — பயொனீயர் மாளிகை தரை வரை எரிந்து போயிற்று, சிறப்பு வாய்ந்த சிகோய்யா, சீதார், யூ ஆகிய மரங்களில் எஞ்சியிருந்தனவெல்லாம் அடிக்கட்டைகள் தாம். ஆனால் என்னை விரைவிலே திரும்பவும் திறந்து வைத்தார்கள். நெஞ்சுகளின் மேல் பதக்கங்கள் அணிந்த இளம் போர்வீரர்களாகிய முதலாவது புதிய விருந்தினர்கள் ஆகஸ்ட், **1944**இல் வந்து சேர்ந்தார்கள். நானும், வழமையான, விருந்தோம்புகிற வாழ்க்கையைத் திரும்பவும் தொடங்கினேன்.

எனது செயற்களம் கருங்கடல் நெடுகிலும் ஏறத்தாழ ஐந்து கிலோமீட்டர்களுக்கு, கரடி மலையிலிருந்து பண்டைய ஜெனோவா கோட்டையின் இடிபாடுகள் வரை பரவியிருக்கிறது. அந்தக் கோட்டையானது கூர்சூஃப் என்ற பழைய கிரீமிய கிராமத்திலிருந்து அதிகத் தொலைவில் அமைந்திருக்கவில்லை. கரடி மலையும் கோட்டையும் என்னுடைய உடைமைகளின் எல்லைகளுக்குக் காவலர்கள் போல இருந்து, எனது விருந்தினர்களுடைய அமைதியைப் பாதுகாக்கின்றன. ஆனால் எதற்காக அவர்களை விருந்தினர்கள் எனத் தொடர்ந்து அழைக்கிறேன்? நான் அழைக்கும் குழந்தைகள் இங்கே வீட்டில் இருப்பது போல உணர்கிறார்கள். உண்மையில், அவர்கள் வீட்டில் இருப்பதைக் காட்டிலும் இன்னும் நன்றாக உணர்கிறார்கள், ஏனெனில் அவர்கள் தான் ஆர்தெக்கின் ஓம்புநர்கள். மேலும் ஆர்வமூட்டக்கூடிய எல்லாவகையான

வயதுவந்தவர்களும் — வீரர்கள், விண்வெளியாளர்கள், எழுத்தாளர்கள், இசைவாணர்கள், விளையாட்டு வீரர்கள் — அவர்களுடைய விருந்தினர்கள். உண்மை, உங்களால் இங்கே நிரந்தரமாகத் தங்க முடியாது, ஆனால் ஆர்தெக்கிற்கு மேற்கொண்ட பயணத்தை உங்களுடைய எஞ்சிய வாழ்க்கை பூராவும் நீங்கள் நினைவு வைத்திருப்பீர்கள் என நான் உறுதி சொல்ல முடியும்.

இன்று என்னிடத்தில் மாளிகைகள், கடற்கரைகள், பூங்காக்கள், விளையாட்டுத் திடல்கள், திரையரங்குகள், அருங்காட்சியகங்கள், நூலகங்கள், மற்றும் ஒரு பள்ளி உள்ளன. ஏனெனில் ஆண்டு முழுக்கவும் இங்கே சிறார்கள் வருகிறார்கள். என்னுடைய பல கட்டடங்களில் உள்ள எல்லா அறைகளையும் சுற்றித்திரிவதற்கு உங்களுக்குப் பல நாள்கள் பிடிக்கும்.

கோடையில், பல்லாயிரக்கணக்கான ரோஜாக்கள் இங்கே பூக்கும், வசந்தத்தில், கடலோரக் குன்றுகள் செர்ரி மற்றும் ஆப்பிள் பூங்கொத்துகளால் மூடப்படும்.

ஆர்தெக் என்பது கூட்டங்கள், ஊர்வலங்கள், ராக்கெட் வடிவமைப்பு, விளையாட்டு, மற்றும் இதழியல் போட்டி. மேலும் தபால்தலை சேகரிப்பாளர்கள், இளம் தொழில் நுட்பவல்லார்கள், **வெள்ளைச் சகடு** செஸ் சங்கம், **ருஷ்ய நினைவுப்பொருள்** விழா, இப்படி ஏராளம், ஏராளம்.

என்னைப் பற்றிப் பாடல்கள், புத்தகங்கள், செய்திப் படங்கள் உண்டு, ஆனால் இதில் சிறந்தது முகாமுக்கு வந்தவர்களே என்ன சொல்லப் போகிறார்கள் என்பதே:

''ஆர்தெக் குழந்தைகளுடைய நகரம். ஒவ்வொன்றும் இங்கே மகிழ்ச்சியாக இருக்கிறது — முகாம்காரர்கள், மரங்கள், பூக்கள், கட்டடங்கள்...''

இயோன் புஸூய்ஸ்க், பேல்த்ஸி நகரம், மல்தாவியக் குடியரசு

''ஒருமுறை எது சிறந்த கடற்கரை என்பது பற்றி விவாதித்துக் கொண்டிருந்தோம். **பெருங்கடல்** முகாம் குழந்தைகள் தங்களுடையது என்றார்கள். **சைபிரஸ்** முகாம் குழந்தைகள் ஒப்புக்கொள்ளாது தங்களது வளைகுடா நீர்தான் சிறந்தது என்றார்கள். **நீலமான** முகாமைச் சேர்ந்தவர்கள் ஒரு பாடலில் உள்ளது போலத் தங்களுடைய கடற்பகுதிதான் 'மிக நீலநிறமானது' என்று விவாதித்தார்கள். நானோ, **கடலோர** முகாமின் கரையே மற்ற எதை விடவும் அருமையானது என்று நினைக்கிறேன். அங்கே அவ்வளவு வித்தியாசமான வர்ணங்களில் கூழாங்கற்கள் இருக்கின்றன!''

சாஷா விஸ்கிரிபான்த்ஸெவ், மாஸ்கோ மாவட்டம்

''ஆர்தெக்கில் முரசு வாசிக்கக் கற்றுக் கொண்டேன். முரசு வாசிபபது உண்மையிலேயே ஆர்வமிக்கது என்பதை உணர்ந்து கொண்டேன். நான் என்ன கற்றுக் கொண்டேன் என்பதை எனது நண்பர்களுக்குக் காட்டினேன். இப்போதே எனக்கு அண்டையிலுள்ள சிறுவர்களில் பாதிப்பேருக்கு முரசு வாசிக்க முடியும்.''

ஜேன்யா வோல்கவ், தூலா நகரம்

''ஆர்தெக்கில் உண்மையான கப்பற்கூட்டம் உண்டு! துடுப்புப் போடும் படகுகளும், மிகப்பெரிய படகுகளும், பயணப்படகுகளும் உள்ளன! நான் அதிர்ஷ்டக்காரன், பல

முறை படகுப் பயணம் செய்தேன். எனது ஊரிலோ கடலே கிடையாது, வெறும் மலைகள் தாம். மிக மோசம்!''

*மூஸா ஐத்மாத்தவ், கிர்கீஸியக் குடியரசு*

''**ருஷ்ய நினைவுப்பொருள்** விழாவில் என்னுடைய அணிக்கு உண்மையில் மிக அருமையான நேரம். குழந்தைகளும் குழுத் தலைவர்களும் ருஷ்ய நாடோடி ஓவியங்களுடன் எல்லாக் கட்டடங்களையும் அழகுபடுத்தி, வித்தியாசமான விளையாட்டுகளையும் போட்டிகளையும் ஏற்பாடு செய்தார்கள். வெற்றி பெறுவனுக்கு ஒரு 'செக்' கிடைக்கும். அதைக் கொண்டு சந்தையில் அவன் விரும்பிய எந்தப் பொருளையும் தேர்ந்தெடுத்துக் கொள்ள உரிமை பெற்றவனாகிறான். பிற குழந்தைகள் தங்களுடைய தேசிய உடைகளுடன் பார்வையிட வந்தார்கள், நாங்கள் எல்லாரும் ருஷ்யப் பாடல்கள் பாடினோம்.''

கோல்யா ஃபெதோதவ், வோல்கோகிராடு மாவட்டம்

''நான் மிக நன்றாக நினைவு வைத்திருக்கும் விஷயம் எல்லைக் காவலர்களைச் சந்தித்தது தான். அவர்கள் எல்லைக் காவல் நிலையத்தையும், பாதுகாவல் நாய்களையும் எங்களுக்குக் காட்டி, சோவியத் வீரர்களின் வீரச்செய்கைகளைப் பற்றிக் கூறினார்கள். எல்லைக் காவலுக்காக யாரை எடுத்துக் கொள்கிறார்கள் என்று காவல்துறை சார்ஜெண்டிடம் கேட்டேன். 'ஒரு நாய்க்குப் பயிற்சி கொடுத்து விட்டு எல்லையைக் காக்குமாறு கேள். ஒரு காவல் நிலையத்திற்கு அனுப்பப்படுவாய், ஒருவேளை, இந்த நிலையத்திற்குத்தான்,' என்று அவர் கூறினார். இப்போது நான் நினைப்பதெல்லாம் எல்லையைப் பற்றியது. ஓர் அல்சேஷியனை வளர்ப்பது பற்றிக் கனவு காண்கிறேன்.''

கோல்யா திகமீரவ், நோவ்கரடு நகரம்

''ஆர்தெக்கில் இளம் மருத்துவ உதவியாளர்கள் குழுவுடன் நான் சேர்ந்து கொண்டேன். துளி கூட நான் வருத்தப்படவில்லை. பிளாச்சி தயாரிக்கவும் முதலுதவி அளிக்கவும் நான் கற்றுக் கொண்டேன். நான் வீடு திரும்பும் போது, எங்களுடைய இளம் பயொனீயர் அணியில் ஒரு மருத்துவ உதவியாளாக இருப்பேன்.''

*லியூஸ்யா கிரீலவா, ஆமுர் மாவட்டம்*

''நான் வானொலி அமைப்பதை விரும்புகிறேன். ஆர்தெக்கில் இருந்தபோது அதில் அதிகம் அக்கறை காட்டினேன்.''

கோல்யா சேலிகவ், *அர்ஹான்கெல்ஸ்க்* நகரம்

''விண்வெளிப் பயணத்தைப் பற்றி நான் கேள்விப்படுந்தோறும், 'அகண்டாகாரம் மிகப்பெரியது. செய்ய வேண்டிய காரியம் அங்கே ஒவ்வொருவருக்காகவும் இருக்கிறது,' என்ற பேரவையாளர் கரலியோவின் வார்த்தைகளை நினைவுகூர்ந்து எனக்கு நானே அமைதியாகிப் போகிறேன். ஆர்தெக் விண்வெளிக் கண்காட்சியில் எங்களில் பலர் பொறுமைச் சோதனையை எடுத்துக் கொண்டோம். விண்வெளியாளர்களுடைய பயிற்சித் திட்டத்தைப் பற்றிப் படிக்கும் போது, அது மிக எளிமையானதாகக் காணப்

படுகிறது, ஆனால் ஒரிரு கருவிகளில் சோதித்துப் பார்க்கிற போது தசைகள் எவ்வளவு வலிமையானதாக இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொள்வாய்!''

விளாதிஸ்லாவ் சிமாகின், மோர்த்வினியக் குடியரசு

''ஆர்தெக்கில் வெற்றியாளர்கள் எப்படிக் கௌரவிக்கப்படுகிறார்கள் என்பது அருமையானது! குறுவிரைவோட்டத்தில் வெற்றி பெற்றதற்காக எனக்குப் பதக்கம் அளித்த கணத்தை என்னால் மறக்கவே முடியாது. அதுதான் நான் பெற்ற முதலாவது பதக்கம். என் வாழ்க்கை முழுக்கவும் விளையாட்டில் ஈடுபட்டிருக்க வேண்டும் என அப்போதே முடிவு செய்தேன்!''

தமாரா ஸ்தரூகினா, தொனேத்ஸ்க் மாவட்டம்

''எங்களுடைய நீண்ட நடைப் பயணத்திற்காக அதிகாலையில் நாங்கள் புறப்பட்டோம். அப்போது இன்னமும் கரடி மலைக்கு மேலாக மேகங்கள் கவிழ்ந்து கொண்டிருந்தன. நாங்கள் ஒற்றை வரிசையில் நடந்தோம். நாங்கள் மேலே செல்லச் செல்ல, ஏறுவது கஷ்டமானதாக இருந்தது, ஆனால் எவரும் புகார்செய்யவில்லை. ஆர்தெக் குழந்தைகள் எல்லாரும் அறிந்த விஷேடமான ஓக் மரத்தை நாங்கள் அடைந்தபோது, சப்தமிட்டோம். எங்களுக்குப் பின்னால் வரக்கூடியவர்களுக்காக மரத்தின் பொந்தில் ஒரு கடிதத்தை விட்டுச் சென்றோம். ஆர்தெக்கில் இது ஒரு மரபு. பிறகு பெரிய பாறையருகே நின்றோம், அங்கிருந்து கீழே ஆர்தெக் முழுவதையும் எங்களால் காண முடிந்தது.''

செர்கேய் இவனோவ், லீபெத்ஸ்க் மாவட்டம்

''திசைக்காட்டுக் கருவியைப் பயன்படுத்தி திசை காண நான் ஆர்தெக்கில் கற்றுக்கொண்டேன். என்னுடைய புதிய நண்பன் அதைக் கற்றுக் கொடுத்தான். வீடு திரும்பியதும், நீண்ட நடைப் பயணமும் எல்லா வித விளையாட்டுப் போட்டியும் ஏற்பாடு செய்யத் திட்டமிட்டிருக்கிறேன்.''

ஸ்லாவா பெத்துகோவ், லிவோவ் நகரம்

''நடனம் இல்லாது இருந்தால் வாழ்க்கையே நிறைந்த சலிப்புடையதாக இருக்கும் என எனக்குத் தோன்றுகிறது. புத்தகங்களோ, சூரியனோ, மலர்களோ இல்லாது இருப்பது போலவே. ஆர்தெக்கில் நடனமில்லாமல் ஒரு நாள் கூட கழிவதில்லை, ஒவ்வொருவரும் நன்றாக உணர்வதற்கு அது உதவுகிறது.''

மரினா ஸிலேன்ஸ்கயா, உஸ்ஸூரீய்ஸ்க் நகரம்

# ஆர்தெக் சுற்றுலா வருமாறு உங்களை அழைக்கிறோம்

*கிரீமியாவில் கருங்கடற் கரையில் தனது முன்னங்கால்கள் நீரில் அமிழ, ஓர் அன்புள்ள மயிரடர்ந்த மிருகமானது படுத்திருக்கிறது. மிக அண்மையில் அது என்ன வகையான விலங்கு என்பதை வேறுபடுத்திப் பார்க்க முடியாது. சற்று தூரம் பின்னுக்கு நடந்தால் அது ஒரு கரடி என்பதையோ, கரடி போலக் காணப்படும் ஒரு மலை என் பதையோ பார்க்க முடியும். அது ஆயூ-தாக் அல்லது கரடி மலை என அழைக்கப் படுகிறது.*

*மிக நீண்ட காலத்திற்கு முன்னால், இப்போது ஆயூ-தாக் மலை இருக்கக் கூடிய இடத்தில் ராட்சசக் கரடிகளின் கூட்டம் வசித்ததாக ஒரு கிரீமியப் புராணம் கூறுகிறது. ஒருநாள், ஒரு சிறிய படகு கரை யேறியது. அதில் சின்னஞ்சிறு சிறுமி ஒருத்தி இருந்தாள். கரடிகள் அவளை விரும்பி, அவற்றோடு வசிப் பதற்காக அவளைப் பிடித்துக் கொண்டன. அவள் அழகிய இளம் பெண்ணாக வளர்ந்தாள். அத்துணை அற்புதமாகப் பாடினாள்! அதை அவை கேட்ட போது தூங்குவதையும் வேட்டையாடுவதையும் மறந்து விடும்.*

*ஒருநாள், கவர்ச்சியான இளைஞன் ஒருவன் கரடிகளுடைய கரை வரை துடுப்பை இயக்கி வந்தான். அவனும் அந்த அழகிய பெண்ணும் காதல் வயப்பட்டனர், இருவருமாக அங்கிருந்து ஓடி விடுவதென்று முடிவு செய்தனர். அவர்கள் ரகசியமாகப் படகுக்குள் தாவி, கடலுக்குள் செல்ல துடுப்பைப் போடத் தொடங்கினார்கள். தப்பித்தல் பற்றிக் கரடிகள் அறிந்த போது சீற்றமடைந்தன. தலைமைக் கரடி, எல்லாவற்றிலும் அது தான் பெரியதுங் கூட, கடல் வரை தட்டுத்தடுமாறிச் சென்று, முழங்காலிட்டு அமர்ந்து நீரை பெருமுயற்சியோடு விழுங்கத் தொடங்கியது. கடல் நீருடன் தப்பிப்போகிறவர்களையும் விழுங்க அது விரும்பியது. ஆபத்தைக் கண்ட அவ்விளம் பெண் காதலையும் மகிழ்ச்சியையும் பற்றிப் பாடத் தொடங்கினாள். அழகிய பாட்டால் மயக்குற்றுப் போன ராட்சசக் கரடியால் காதலர்களுக்குத் தீங்கு செய்ய முடியவில்லை. நீரின் விளிம்பில் அங்கே நிரந்தரமாக உறைந்து போய்விட்டது.*

*புராணக்கதை சார்ந்த மலைக்கு அருகிலிருந்து ஆர்தெக் தொடங்குகிறது. ஆலிவ் மரங்களுக்கும், மெக்நோலிய தாவரங்களுக்கும், புன்னை மரங்களுக்கும் மத்தியில் கடற்கரையில் அமைந்துள்ள* **பெருங்கடல்** *முகாமிலிருந்து குழந்தைகளுக்கான புதிய, நவீன ஓய்விடத்தைச் சுற்றி நமது பயணத்தைத் தொடங்கலாம். அதனுடைய அழகிய, மகிழ்வார்ந்த தூங்கும் குடியிருப்புகள் பெருங்கடல் கப்பலின் மேல்தளங்கள் போலக் காணப்படுகின்றன.*

*முகாமின் நுழைவாயிலில்* **அனைத்து நாட்டுக் குழந்தைகளின் நட்புறவுக்கான** *நினைவுச்சின்னம் நிற்கிறது.*

**பெருங்கடல்** *முகாமின் மத்திய பகுதி —* **நட்புறவுச் சதுக்கம்** *— எல்லா தேசிய இனங் களைச் சேர்ந்த குழந்தைகளால் எப்போதுமே நிறைந்து காணப்படுகிறது, ஏனெனில் ஒவ்வோர் ஆண்டும் ஆர்தெக்கிற்கு உலகின் எல்லா நாட்டுக் குழந்தைகளும் வருகிறார் கள்.*

*கீழ் முகாமிலிருந்து,* **மலை** *முகாம் என்ற மேல் முகாமிற்கு வளைந்து செல்லும் பாதையில் நாம் போக வேண்டும். கூர்மையான திருப்பத்திற்குப் பிறகு, ஒரு பெரிய சிலைக்கு வந்து சேருவோம். 1943இல், கிரீமியாவை விடுவிப்பதற்காக நடந்த சண்டையில் கொல்லப்பட்ட* **பெயரறியா மாலுமிக்கான** *நினைவுச்சின்னம் அது.*

இரண்டாம் உலகப் போரின் போது, 1941ஆம் ஆண்டு ஜூன் மாதம் சோவியத் யூனியனைத் தாக்கிய நாஜிகளை எதிர்த்துப் போரிட்ட ஏராளமான சோவியத் மக்களில் அந்தப் **பெயரறியா மாலுமியும்** ஒருவன். அது ஒரு நீண்ட, கடினமான போர். அதை சோவியத் மக்கள் மாபெரும் தேசபக்தப் போர் என்று அழைக்கிறார்கள். போர் முனையில் காலமான ஆண்கள், பெண்களின் நினைவைப் போற்று கிறார்கள். போரில் மரணமடைந்த படைவீரர் களுக்கும், மாலுமிகளுக்கும், விமானிகளுக்கும் சோவியத் யூனியனில் நூற்றுக்கணக்கான நினைவுச்சின்னங்கள் உள்ளன.

பனிவெள்ளை நிறக் கட்டடங்களுடன் உள்ள **மலை** முகாம் என்ற இரண் டாவது முகாமிற்கு இப்போது நாம் வந்திருக்கிறோம்.

இந்த முகாமில் ஆர்வமூட்டும் முக் கியமான இடம் புகழ்பெற்ற பாதுகாக்கப் படும் மரத் தோட்டமாகும். தோட்டத் திற்குப் பின்னால் ஆர்தெக் பள்ளிக் கட் டடம் இருக்கிறது, ஆனால் அது சா தாரணப் பள்ளியை விட மேலானது. பொழுதுபோக்குக் குழுக்களுக்கான அறைகள், தொழில்நுட்பக் கருவி கண் காட்சி, கடற்படை கண்காட்சி, துப் பாக்கிப் பயிற்சிக்கான தளம், புகைப் பட லேபாரேட்டரி, **சோவியத் யூனியன் — எனது நாடு** என்ற கண்காட்சி, **ஆர்தெக் ஃபிலிம் ஸ்டுடியோ**, ஆர்தெக் வானொலி நிலையம் ஆகியவையும் அங்கே இருக் கின்றன.

பள்ளிக்கு முன்பாக உள்ள சதுக்கத் தில் கருங்காரை மீது (ஆம், கருங்காரை!) ஆண்டுதோறும் நிகழும் ஓவியப் போட்டி நடைபெறுகிறது.

தெருவைக் கடந்து, சற்று தாழ்வாக, சாம்பல் நிற ஓட்டப்பாதையால் சூழப் படும் மரகதப் பச்சை கால்பந்தாட்டக் களத்துடன் கூடிய மிகப் பெரிய ஆர்தெக் விளையாட்டரங்கம் இருக்கிறது. நீச்சல் குளம் அடுத்து இருக்கிறது.







போருக்குப் பிறகு கட்டப்பட்ட ஆர்தெக்கின் புதிய தோற்றம். புதிய குடியிருப்புகள். பெயரறியா மாலுமிக்கான நினைவுச்சின்னத்தில் மரியாதைக் காவல். தங்கள் நாட்டைக் காப்பதில் கொல்லப்பட்ட முன்னாள் ஆர்தெக் முகாம்காரர்கள் நினைவுக்கல் அருகே வீறார்ந்த அணிவகுப்பு.











லெனின் நினைவுச்சின்னம். கொண்டாட்டங்கள் நடைபெறக் கூடிய நட்புறவுச் சதுக்கம்.







மலை முகாமிலிருந்து நாங்கள் கீழே **கடலோர** முகாமுக்குச் செல்வோம், இங்கே தான் ஆர்தெக்கின் மிகப் பெரிய ரோஜாத் தோட்டம் இருக்கிறது. ரோஜாக்களின் மணம் உப்புடையதான கடற்காற்றுடன் கலக்கிறது. இன்னும் சற்றுக் கீழே கடற் கரைக்கு நாம் சென்றால், புகழ்மிக்க ஆர்தெக் 'கப்பற்கூட்டம்' அலைகளில் அசைந்து கொண்டிருக்கும் துறையை நாம் காணலாம். அங்கே விரைவுமிக்க படகுகள், வேகமாய்ச் செல்லும் எந்திரப் படகுகள் மற்றும் பெரிய பயணப்படகுகள் உண்டு. கப்பற்கூட்டத்தின் முன்னணியில் கொடிக்கப்பல் **ஆர்தெக்** நிற்கிறது.

நாம் திரும்பவும் மேலே நடந்து (கடற்கரையின் சரிவுகள் நெடுகிலும் ஆர்தெக் அமைக்கப்பட்டிருப்பதால் நீங்கள் தொடர்ச்சியாக மேலும் கீழுமாகப் போய்வந்து கொண்டிருப்பீர்கள்), பல்வேறு நாடுகளிலிருந்து வந்த குழந்தைகளால் உருவாக்கப் பட்ட **நட்புறவுப் பூங்காவைக்** கடந்து ஆர்தெக் பயொனீயர் மாளிகை நுழைவாயிலை அடைகிறோம். அதில் விளதீமிர் இலியீச் லெனின் பெயரில் பயொனீயர் அனைத்து யூனியன் அமைப்பின் வரலாற்றுப் பொருட்காட்சியும், சோவியத் யூனியனின் முத லாவது விண்வெளிக் கண்காட்சியும் இடம் பெற்றிருக்கின்றன.

பத்து முதல் பதினைந்து வரையிலான குழந்தைகளுக்கான முதலாவது பயொனீயர் குழுக்கள் மாஸ்கோவில் 1922இல் ஏற்படுத்தப்பட்டன. தங்களுடைய அமைப்பின் அடையாளங்களை உறுப்பினர் கள் தாங்களாகவே முடிவு செய்தனர்: ஒரு சிவப்புப் பதாகை, ஒரு கொடி, ஒரு சிவப்பு டை, ஒரு சின்னம்.

ஆண்டின் மிகவும் ஆர்வமூட்டக்கூடிய பகுதி பயொனீயர் முகாம்களில் கோடையில் துவங்குகிறது. செய்வதற்கு பல ஈர்த்துப்பற்றுகிற விஷயங்கள் உண்டு: நடைப் பயணங்கள், எக்காளத்தில் காலைப் பள்ளியெழுச்சி ஒலி எழுப்ப வாசிக்கக் கற்றுக் கொள்ளல், அற்புதமான பயொனீயர் நெகிடி விழா மற்றும் பிற.

பயொனீயர் மாளிகையிலிருந்து செல்தடம் ஆர்தெக்கினுடைய பழைய முகாமாகிய **நீலமான** முகாமிற்கு இட்டுச் செல்கிறது. அங்குள்ள பழைய பூங்கா, நீலநிறக் குடா, கண்ணைக் கவர்ந்திழுக்கின்ற குகைகள் எல்லாம் நமக்கு வரலாற்றை நினைவுபடுத்து கின்றன. இதோ, உச்சி மீது பாறை கொண்ட குகையும், கூடாரமண்டபமும், அந்த இடங்களுக்கு மிக நீண்ட காலத்திற்கு முன்பாகப் பயணம் செய்த பூஷ்கினை உங் களுக்கு நினைவுபடுத்துகிறது.

அலெக்சாந்தர் செர்கேயெவிச் பூஷ்கின் (1799—1837) இளைஞர்களாலும் முதியவர்களாலும் வாசிக்கப்படும் மிகப்பெரிய ருஷ்யக் கவிஞர்.

அவர் கிரீமியாவையும், கருங்கடலையும் விரும்பினார், அவற்றிற்கு அற்புதமான கவிதைகள் பலவற்றை அர்ப்பணம் செய்தார். புகழ்பெற்ற ஒரு கவிதையிலிருந்து ஓரிரு வரிகள்:

பெருமைமிகு அலைகளே போய்வருக,
அருமையாய் மினுக்கின்றாய் கடலையே,
விரிகடலே உனக்கேது தளைகள்,
புரிகின்ற அழகோ ஓராயிரம்.

அணிவகுப்புகள் நடைபெறும் சதுக்கத்தில், இரண்டாம் உலகப் போரில் இறந்த முன்னாளைய ஆர்தெக் முகாம்காரர்களுடைய பெயர்கள் பொறிக்கப்பட்ட நினைவுக் கல் ஒன்று இருக்கிறது.

எங்களுடைய பயணத்தில் கடைசி முகாமாக வருவது **சைபிரஸ்** முகாம். அதனுடைய மரங்களுக்காக அது புகழ்பெற்றது, ஆகவேதான் அந்தப் பெயர்.

நீங்கள் உற்றுப் பார்த்தால், முகாமிற்கு மேலுள்ள செங்குத்துப் பாறை மீது ஜெனோவா கோட்டையின் இடிபாடுகளைப் பார்க்கலாம். செங்குத்துப் பாறையின் அடியில் பூஷ்கினுக்கு ஒரு சிறிய நினைவுச்சின்னம் இருக்கிறது.

## தோற்றமாறுபாடுகள்

ஆர்தெக்கில் பல அற்புதமான இடங்கள் இருக்கின்றன — பூங்காக்கள், மலைகள், சிலைகள், போன்றவை. ஆனால் முகாமிற்குப் பெருமையும் மகிழ்வும் தருவது கடல் தான். கடல் இல்லையென்றால் ஆர்தெக், ஆர்தெக்காக இருக்காது. இது காரணமாகத்தான், இங்கு வரும் ஒவ்வொருவரும், பஸ்ஸில் இருந்தவாறு நீரைக் கூர்மையோடு விழித்துப் பார்க்கிறார்கள். அதோ! அது வித்தியாசமானது, நாள் முழுக்கவும் நேரத்தைப் பொருத்து காலையில் பசுமையாகவும், பகலில் நீலமாகவும், இரவில் கருப்பாகவும் இருக்கிறது...

கடல்! முதல் தடவையாக அதைக் காணக்கூடியவர்களுக்குத் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொள்வது சிரமமானது. கடலைக் கண்ணாரப் பார்த்த பிறகே, மற்ற இடங்களை பார்க்கத் தொடங்குவார்கள்: மலைகள், செங்குத்துப்பாறைகள் மற்றும் அவர்கள் வசிக்கப் போகிற வெள்ளைக் கட்டடங்கள்.

...சூரிய வெளிச்சத்தில் பிரகாசித்த மிகப்பெரிய, கண்ணாடிக் கட்டடத்தின் முன்பாகப் பேருந்து நின்றது.

''நாம் எங்கிருக்கிறோம்? அந்தக் கட்டடம் என்ன?''

''தோற்றமாறுபாடுகளின் இல்லம்,'' பேருந்திலிருந்து குழந்தைகள்



கீழே இறங்க உதவிய ஓட்டுநர் குறும்புத்தனமாகப் பல்லிளித்தவாறு கூறினான்.

ஓல்காவும் கோல்யாவும் சைபீரியாவிலிருந்து வந்து சேர்ந்திருந்தார்கள். ஓல்கா மிகவும் அழகானவள் என்று கோல்யா நினைத்தான், ஆனால் தன்னைப் பற்றி அவன் முற்றிலும் மாறுபாடான கருத்துக் கொண்டிருந்தான். தோற்றமாறுபாடுகள் இருந்தாலும் சரி இல்லாவிட்டாலும் சரி, அவனுக்கு ஒன்று தான். திருத்தப்படாதவாறும், அருவருப்பானவாறும் அவன் தங்கியிருப்பான்.

மற்றவர்களுடன் ஓல்காவும் கோல்யாவும் அந்தக் கட்டடத்திற்குள் நுழைந்தார்கள். என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை அவர்கள் அறியும் முன்பே, இரு குழுக்களாக அவர்கள் பிரிந்திருந்தார்கள் — ஒன்றில் சிறுவர்களும், மற்றொன்றில் சிறுமிகளும். காற்றில் ஏதோ மந்திர சக்தி இருப்பது போல இருந்தது, அச்சக்தி



பல நட்புக் கரங்களும், கண்களும், காதுகளும் பெற்றிருந்தது. காதுகளும் கண்களும் அவனைக் கவனமாகச் சோதித்துப் பார்த்தன, கைகள் அவனது தலைமுடியைக் கத்தரித்து, அவனைக் குளிப்பாட்டி, புதிய ஆடையை அணிவித்தன.

இவை எல்லாம் முடிந்து, கோல்யா பூங்காவுக்குச் சென்றான். வெள்ளைச் சட்டைகள், நீலக் காற்சட்டைகள், சிவப்பு டைகள், வெள்ளைக் காலுறைகள், பழுப்பு செருப்புகளுடன் இருந்த பிற குழந்தைகளைப் பார்த்துப் பாராட்டினான்.

அவர்கள் காணப்படுவது போலவே அவனும் உண்மையாகவே காணப்பட்டானா? பிறகு ஓல்கா ஓடி வருவதைக் கவனித்தான். அவனைப் பார்த்துத் தனது கைகளை வீசினாள்.

''நீ அவ்வளவு அழகாகக் காணப்படுகிறாய்!'' என்று கூவினாள்.

வெண்ணிற பனாமாத் தொப்பிகளும், நீலச் சட்டைகளும், காற்சட்டைகளும்

அணிந்த, ஒல்லியான, வெயிலால் கறுத்த சிறுவர்களும் சிறுமிகளும் அணியாக அவர்களைக் கடந்து சென்றார்கள். வரவேற்புக் கட்டடத்தின் அருகே புதிதாக வந்தவர்களைக் கண்டு, ஒற்றுமையாக நட்புறவு வாழ்த்துக் கூறிக் கத்தினார்கள்.

''வணக்கம், எல்லாருக்கும்!''

''வணக்கம்!'', ''வணக்கம்!'' என்று புதிதாக வந்தவர்கள் தனித்தனியாகப் பதிலளித்தார்கள். அவர்கள் இன்னமும் உண்மையான ஆர்தெக் முகாம்காரர் களாகவில்லை, ஒரே குரலில் வாழ்த்துகின்ற அல்லது வாழ்த்துக்குப் பதிலளிக்கும் ஆர்தெக் பழக்கத்தை அவர்கள் கற்றுக் கொண்டிருக்கவில்லை. எனினும், அவர்களது வாழ்த்து ஆர்வமூட்டுவதாக இருந்தது. ஆர்தெக் முகாமே, வணக்கம்! புதிய நண்பர் களே, வணக்கம்!



## 'பனி என்பது பனி போலத்தான்!'

ஆர்தெக்கில் முதல் சில நாள்கள் அறிமுகப்படுத்திக் கொள்கின்ற நாள்களாகும். சிரியோஷா அலெக்சேயெவ் அதிருஷ்டக்காரனாக இருந்தான். ஆப்பிரிக்காவிலிருந்து வந்த ஒரு பையனைச் சந்திக்கும் நம்பிக்கை கொண்டிருந்தான், சந்திக்கவும் செய் தான். அந்த ஆப்பிரிக்கப் பையனின் பெயர் மரியான். மிகுந்த எழுச்சியும், அறியும் அவாவும் கொண்டவன். அவன் பாடிக் கொண்டிருக்கவில்லையானால், கேள்விகள் கேட்டுக் கொண்டிருப்பான்.

ஒரு நாள் சிரியோஷாவிடம் பனி எது போல இருக்கும் எனக் கேட்டான். சிரி யோஷா விளக்க முற்பட்டான். ஆனால் மரியானால் புரிந்து கொள்ள முடியவில்லை. அவனுக்குக் காட்டுவதே சிறப்பாக இருக்க முடியும் என சிரியோஷா முடிவு செய்தான்,



ஆகவே உணவுக் கூடத்திலிருந்து கை நிறைய உப்பு எடுத்து, அதைக் காற்றிலே வீசி எறிந்துவிட்டுக் கத்தினான்:

''பார், மரியான், பனி என்பது அது போன்றது!''

கொஞ்சம் துகள்களைப் பொறுக்கி எடுத்து மரியான் அதைச் சுவைத்தான். பிறகு ஒரு மொழிபெயர்ப்பாளர் உதவியுடன் கூறினான்:

''பனி உப்பைப் போல இருக்கிறது — அது உப்புடையதாகவே இருக்கிறது.''

சர்க்கரை மூலம் முயற்சிப்பதென்று சிரியோஷா முடிவு செய்தான்.

மரியான் அதைச் சுவைத்து விட்டு பனி சர்க்கரையைப் போல இருக்கிறது என்று இப்போது புரிந்து கொண்டான் — தித்திப்பாகவும் சுவைமிக்கதாகவும் இருக்கிறது என்று சொன்னான்.

பிறகு சிரியோஷா கொஞ்சம் இறகுகளைக் கண்டுபிடிப்பதில் வெற்றி பெற்றான்.

''பார்,'' என்று மரியானிடம் சொன்னான், ''இது பனி போலவே இருக்கிறது.''

''புரிந்துகொண்டேன்,'' என்றான் அந்த ஆப்பிரிக்கன். ''பனி என்பது இறகுகளைப் போன்றது. அது மென்மையாகவும் மொத்தையாகவும் இருக்கிறது.''

சிறுவன் மரியான் இன்னமும் பனி எப்படி இருக்கும் என்பதைப் பற்றி ஒரு தெளிவான கருத்தைப் பெற முடியவில்லை.

ஒரு நாள் காலையில் சிரியோஷா விழிந்தெழுந்த போது அவனுடைய கண்களையே அவனால் நம்ப முடியவில்லை. தரை முற்றிலும் வெண்மையாக இருந்தது.

''அடேயப்பா!'' அவன் கத்தினான். ''ஆர்தெக்கிற்கு குளிர்காலம் வந்து விட்டது.''

''குளிர்காலமாவது கிளிர்காலமாவது!'' அவனுடைய அறை நண்பன் சொன்னான்.

''ஓரிரு நிமிடங்களில் எல்லாமே உருகிப்போகும்.''

அவன் சொன்னது சரி! சிரியோஷா அவசரமாக உடுத்திக் கொண்டு வெளியே ஓடினான். பனியை இரு கைநிறைய வாரி எடுத்துக் கொண்டு, மரியானை உசுப்புவதற்காக விரைந்தான்.

''மரியான், ஏய் மரியான்! எழுந்திரு! உனக்குக் கொஞ்சம் பனி கொண்டு வந்திருக்கிறேன்!''

மரியான் விழித்தெழுந்து சிரியோஷாவினுடைய கைகளில் வெண்ணிறப் பொருளை ஆர்வத்தோடு நோக்கினான்.

''பஞ் — சு,'' என்று சிரமப்பட்டுச் சொன்னான்.

''இல்லை, பஞ்சு இல்லை. இது பனி!'' என்றான் சிரியோஷா. ''இதோ, ருசித்துப் பார்.''

ஆப்பிரிக்கன் கொஞ்சம் சுவைத்துப் பார்த்துவிட்டான், பிறகு சன்னலுக்கு வெளியே நோக்கினான். அசட்டுச் சிரிப்பால் அவன் முகம் விரிந்தது. கடைசியாக அவன் பனியைப் பார்த்தும் விட்டான், அதை ருசித்தும் விட்டான்!

''பனி எதைப் போலவும் இல்லை,'' என்று மொழிபெயர்ப்பாளர் மூலம் கூறினான். ''பனி என்பது பனி போலத்தான்.''



## அன்பளிப்பு

வெறுங்கையோடு யாருமே ஆர்தெக்கிற்கு வரவில்லை. ஒவ்வொருவரும் எதோ ஒரு அன்பளிப்பை முகாமிற்குக் கொண்டு வருகிறார்கள்.

ஸேகெஷ்ஃபெகொர்வார் என்ற ஹங்கேரிய நகரத்திலிருந்து வந்த கதலீனா கோவச் என்ற சிறுமி வெள்ளீயமும் காரீயமும் கலந்த உலோகக் கலவையால் செய்யப்பட்ட புறா ஒன்று கொண்டு வந்தாள். அது ஏன் மரத்தாலோ, செம்பாலோ இல்லை என்று பெரும்பாலும் நீங்கள் வியப்படையக் கூடும்... வெள்ளீயக் காரீய உருக்குத் தொழிற்சாலை உள்ள இடத்திலிருந்து கதலீனா வருகிறாள். ஆர்தெக்கிற்காக அவள் சோவியத் யூனியனுக்குப் போகப் போகிறாள் என்பதை அறிந்த தொழிலாளர்கள், உலோகக் கலவையாலான புறா ஒன்றை வடித்துக் கொடுத்தார்கள். புறா ஏன்? எல்லாருக்கும் தெரியும் சமாதானத்தின் சின்னம் புறா என்பது.

அர்தெக்கில் மிகவும் அன்பானவரும், மிகவும் மதிக்கப்படுபவருமான ஒருவருக்கு அந்தப் புறாவைக் கொடுக்கும்படி தொழிலாளர்கள் கதலீனாவிடம் சொல்லியிருந்தார்கள். ஆனால் ஆர்தெக்கில் பல அற்புதமான மனிதர்கள் இருக்கும் போது, அன்பளிப்பை யாரிடம் கொடுப்பது என்பதை அவளால் எங்ஙனம் தீர்மானிக்க முடியும்? அருமைச் சமையல்காரர் அந்திரேய் மக்சீமவிச் மிகவும் நல்லவர். அவரை எல்லாரும் 'வயிறு நிறையச் சாப்பிடுங்கள்' என அழைத்தார்கள். அடுத்து மிகப் புத்திசாலியான நூலகர் லரீசா வசீலியெவ்னா. அவளைப் பற்றி ஒரு கதைகூட உண்டு:

ஒரு முறை ஓர் அந்நியநாட்டுச் சிறுவன் 'புக்' ஒன்றைத் தேடிக் கொண்டு ஆர்தெக் முழுக்க நடந்தான். ஆங்கிலம் அறிந்தவர்கள் அதை 'புத்தகம்' என்று மொழிபெயர்த்தார்கள். அவன் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறான் என்பதை அறிந்த பிறகு மற்றவர்கள், ருஷ்யன், ஆங்கிலம், பிரெஞ்சு மொழிகளில் எல்லாவகையான புத்தகங்களையும் அவனுக்குக் கொடுக்கத் தொடங்கினார்கள். ஆனால் அவற்றை எடுத்துக் கொள்ளாது பையன் தொடர்ந்து, 'புக்' என்று சொல்லிக் கொண்டிருந்தான். பிறகு அவர்கள் அவனை நூலகத்திற்குக் கூட்டிச் சென்றார்கள். ''இதுதான் நமது நூலகம், அதோ அங்கே நமது நூலகர் இருக்கிறார்,'' என்றனர். அந்தப் பையன் லரீசா வசீலியெவ்னாவை பார்த்த உடனேயே, 'புக், புக்!' என்று கத்தத் தொடங்கினான். அவளைத் தான் அவன் தேடிக் கொண்டிருக்கிறான் என்பது தெரிந்தது.

'சூரிய ஒளி' வலோத்யாவும் மிகப் பெரிய ஆள். எல்லா அறைகளையும் முறையாகப் பார்வையிட்டு 'சிறிய சூரியன்கள்' எல்லாம் பிரகாசிப்பதை உறுதிப்படுத்திக் கொள்ளும் அவர் ஓர் எலெக்ட்ரீஷியன். அவற்றில் ஒன்று எரியாமல் போனால், புதிய ஒன்றை 'ஏற்றுவார்.'



*குழுத் தலைவியான ஸ்வேத்தா அழகும் துணிச்சலும் மிக்கவள், ஹங்கேரிய மொழி பேசுவதனால் கதலீனாவுடன் அவளது சொந்த மொழியில் அவளால் பேச முடிந்தது.*

*சமையல்காரர் அந்திரேய் மக்சீமவிச், நூலகர் லரீசா வசீலியெவ்னா, எலெக்ட்ரீஷியன் வலோத்யா, அவளுடைய குழுத் தலைவி ஸ்வேத்தா இவர்களிடையே அவளுடைய அன்பளிப்பைப் பெறுவதற்குத் தகுதியானவரை அவள் எங்ஙனம் தேர்ந்தெடுப்பாள்?*

*ஒரு பெஞ்சின் மீது அமர்ந்து கதலீனா நீண்ட நேரம் சிரமப்பட்டுச் சிந்தித்தாள். அவளுடைய முகாம் காலம் சீக்கிரமே முடியப் போகிறது, ஆனால் அன்பளிப்புப் பற்றி அவள் இன்னமும் முடிவு செய்யவில்லை. கடல் மென்மையாக 'ஸ்-ஸ்-ஸ்' என முணுமுணுத்தது, கதலீனாவும் திரும்பப் பதிலளித்தாள்: 'ஸ்-ஸ்-ஸ்'. யாரேனும் அதை ஒட்டுக் கேட்டிருந்தால், ஒரு சின்னஞ்சிறுமி கடலோடு கிசுகிசுத்துக் கொண்டிருப்பதை வித்தியாசமானதாகவே நினைத்திருக்கக் கூடும், ஆனால் கதலீனாவோ அன்பளிப்புப் பிரச்சினை பற்றிக் கடலோடு பேசிக் கொண்டிருந்தாள். திடீரென்று ஒரு குரல் கத்துவதைக் கேட்டாள்:*

*''கதலீனா!''*

*கடலா பதிலளித்துக் கொண்டிருந்தது? இல்லை, அது ஸ்வேத்தா, அவளுடைய குழுத் தலைவி. அவள் கடற்கரைக்கு வந்து கதலீனாவைப் பார்த்து அழைத்திருந்தாள். அங்கே வந்து உட்கார்ந்தாள்.*

*''எதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறாய்?'' எனக் கேட்டாள்.*

*''புறாவைப் பற்றி,'' என கதலீனா பதிலளித்தாள். ''அதை யாருக்குக் கொடுப்பதென்று எனக்குத் தெரியவில்லை.'' முழுக்கதையையும் அவள் ஸ்வேத்தாவிடம் கூறினாள்.*

*''நல்லது,'' என்றாள் ஸ்வேத்தா. ''நாம் ஒன்று சேர்ந்து முயலலாம். அந்திரேய் மக்சீமவிச் ஓர் அற்புதமான மனிதர். அவருடைய உணவு சுவையானது,* பெருங்கடல் *முகாமிலுள்ள ஒவ்வொருவரும் வயிறுநிறையச் சாப்பிடுகிறார்கள். ஆனால் உனக்குத் தெரியுமா, கதலீனா, எங்கள் நாட்டிலே ஒரு மனிதர் இருந்தார், அவர் பசியுடனும், வெறுங்காலுடனும் இருந்த லட்சக்கணக்கானவர்களும் உணவும் உடையும் அளித்தார். எலெக்ட்ரீஷியனான வலோத்யாவும் உண்மையில் ஓர் அருமையான மனிதர், ஆனால் உனக்கும், உன் அறையிலுள்ள மற்ற இருபது முகாம்காரர்களுக்கும் மட்டுமே வெளிச்சம் தருகிற 'சிறிய சூரியன்களை' அவர் ஏற்றுகிறார். அதே வேளை ஒரு மனிதர் இருந்தார், அவர் எங்களுடைய பரந்த நாட்டில் எல்லா விளக்குகளையும் ஏற்றி வைத்தார். லரீசா வசீலியெவ்னா மிக அன்பானவள், ஆனால் அவள் தரும் புத்தகங்கள் நமது முகாமில் மட்டுமே படிக்கப்படுகின்றன. நான் பேசிக் கொண்டிருக்கக் கூடிய மனிதர் கல்வியறிவற்ற லட்சக் கணக்கான மக்களுக்குப் படிக்கவும் எழுதவும் கற்றுக் கொடுத்தார். நான் உன்னுடைய தலைவி. அதன் பொருள் மற்றவர்களுக்கு வழிகாட்டக் கூடிய ஆள் என்பது, உனக்காகவும் நமது குழுவிலுள்ள பிற சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் அதை நான் செய்கிறேன். அந்த மனிதரும் கூட ஒரு தலைவர் தான், ஆனால் எங்கள் நாடு முழுமைக்கும் அவர் வழிகாட்டினார், நன்றாக வாழ்வது எப்படி என்பது பற்றி ஒவ்வொருவருக்கும் காட்டினார். என்னுடன் வா, ஆர்தெக்கில் மிகவும் மதிக்கப்படும் மனிதரை நான் உனக்குக் காட்டுகிறேன்.''*

அவர்கள் குன்றின் மீது ஏறி நெகிடிச் சதுக்கத்திற்கு வந்தார்கள்.
''அதோ இருக்கிறார்,'' என்று ஸ்வேத்தா சுட்டிக் காட்டினாள்.
அங்கே மலை உச்சியின் மீது விளதீமிர் இலியீச் லெனினுடைய சிலை இருந்தது.

## அதே பெயருடைய மற்றொருவர்

சிலவேளைகளில் பெற்றோர்கள், தாத்தாக்கள், அல்லது பாட்டிகள் தங்களுடைய குழந்தைகளுக்குப் புகழ்பெற்ற வீரர் அல்லது விருப்பமான எழுத்தாளர் அல்லது நடிகரின் பெயரைச் சூட்டுகிறார்கள். ஆர்தெக்கிற்கு வந்த ஒரு பையனுடைய தாத்தா அவனுக்கு தைமூர் எனப் பெயரிட்டிருந்தார், அவருடைய தோழனாகிய ஒரு போர் வீரனின் பெயரை. தைமூருடைய தாத்தா பல ஆண்டுகளுக்கு முன்னால் இறந்து போய்விட்டார், அவருடைய நண்பனைப் பற்றி தனது தாத்தா என்ன சொன்னார் என்பதை அவனால் சரியாக நினைவுகூர முடியவில்லை.

ஒருநாள் காலையுணவிற்குப் பிறகு, நடைப் பயணத்திற்காக எக்காளம் முழங்கியது. முகாம்காரர்கள் கடற்கரை நெடுகிலும் நடந்து குன்றின் மீது ஏறி, பாதுகாவலர்கள் போல சுற்றிச் சூழ்ந்திருந்த பிலைன் மரங்களும், சைபிரஸ் மரங்களும் நின்ற ஒரு சிறிய திறந்த வெளிக்குச் சென்றார்கள். ஆனால் குழந்தைகள் மரங்களைக் கவனிக்கவில்லை — திடலின் மையத்தில், பூம் பாத்தியில், கரடி மலையிலிருந்து கொண்டுவரப்பட்ட கற்பாளம் ஒன்று நின்றது. ஒரு வெள்ளைச் சலவைக்கல்லில் வாசகம் பொறிக்கப்பட்டிருந்தது: 'அவர்கள் முன்னாள் ஆர்தெக் முகாம்காரர்கள்'. ஒரு பெயர் தைமூரை வியப்பிலாழ்த்தியது, அவனுடைய இதயம் வேகமாக அடிக்கத் தொடங்கியது — 'தைமூர் ஃப்ரூன்ஸே'. ஒருகால் அந்தப் புகழ்பெற்ற மனிதருடைய பெயர் அவனுக்குச் சூட்டப்பட்டிருக்குமோ? குழுத் தலைவர் என்ன சொல்லிக் கொண்டிருக்கிறார் என்பதைக் கவனமாகக் கேட்க முடிவு செய்தான்.

''தைமூர் ஃப்ரூன்ஸேயுடைய அப்பாவைப் பற்றி நீங்கள் எல்லாரும் கேள்விப்பட்டிருக்கிறீர்கள். அவர் ருஷ்ய உள்நாட்டுப் போரின் புகழ்பெற்ற தளபதி மிஹயீல் வசீலியெவிச் ஃப்ரூன்ஸே.''

அக்டோபர், 1917இல் ருஷ்யாவின் தொழிலாளர்களும் விவசாயிகளும் கொழுத்த நிலக்கிழார்களுடைய, ஆலை உரிமையாளர்களுடைய அரசாங்கத்தைத் தூங்கி எறிந்துவிட்டு ருஷ்யப் புரட்சியை மேற்கொண்டார்கள். ஆனால் ஆலைகள், எந்திரசாதனங்கள், பண்ணைகள் இவற்றின் முன்னாளைய சொந்தக்காரர்கள் தங்கள் உடைமைகளின் இழப்பை ஏற்றுக் கொள்ள விரும்பாமல், புரட்சியை ஒடுக்க வலிமையைப் பயன்படுத்துவது என்று தீர்மானித்தார்கள். உள்நாட்டுப் போர் தொடங்கியது. புரட்சியின் சாதனைகளைப் பாதுகாப்பதற்காகத் தொழிலாளர்களும் விவசாயிகளும் செஞ்சேனையை உருவாக்கினார்கள். அதனுடைய தளபதிகளில் ஒருவர்தான் மிஹயீல் வசீலியெவிச் ஃப்ரூன்ஸே.

''தைமூர் ஃப்ரூன்ஸேயுடைய பெற்றோர்கள் ஆரம்பத்திலேயே இறந்து விட்டார்கள், ஆகவே அவனும் அவனுடைய சகோதரியும் மற்றொரு புகழ்பெற்ற செஞ்சேனைத் தளபதி கிலிமேன்ட் எஃப்ரேமவிச் வரஷீலவால் வளர்க்கப்பட்டார்கள்.

''1935இல் ஆர்தெக்கிற்கு வந்த இளம் தைமூர் ஓர் உண்மையான தலைவன் என்பதைக் காட்டினான்.

''உலகத்தில் வேறு எதைக் காட்டிலும் வானப்பயணத்தைப் பெரிதும் விரும்பினான். அவனுடைய குழந்தைப்பிராய வீரர்கள் ச்காலவ், கிரோமவ் மற்றும் கோக்கினாக்கி

போன்றோர், இவர்கள் அனைவரும் அந்த நாள்களின் புகழ்பெற்ற சோவியத் விமானிகள்.''

*1937இல், விமானிகளாகிய வலேரி ச்காலவ், மிஹயீல் கிரோமவ், விளதீமிர் கோக்கினாக்கி ஒரு வீரனுக்குரிய வரவேற்பை இரு கண்டங்களில் பெற்றார்கள். ஆனால் அது வியப்புக்குரியது அன்று. அந்நாள்களில் வடதுருவத்தின் வழியாக மாஸ்கோவிலிருந்து அமெரிக்காவிற்கு நிற்காமல் பறப்பது ஓர் உண்மையான வீரச்செய்கையாகும்.*

''தைமூர் ஃப்ரூன்ஸேயும் ஒரு விமானியானான். அவனுடைய வானப்பயணத் திறமை இரண்டாம் உலகப் போரின் போது முதலாவதாகச் சோதிக்கப்பட்டது. எதிரி வெடிகுண்டுவீச்சு விமானங்களை வீழ்த்தும் பட்டியலை அவன் தொடங்கிய போது அவனுக்கு வயது பதினெட்டுத்தான்.

''ஜனவரி 19, 1942இல், ஸ்தாரயா ரூஸ்ஸா பகுதியில், எதிரி வெடிகுண்டுவீச்சு விமானங்களை நோக்கித் தனது விமானத்தை தைமூர் செலுத்தினான். விமானச் சண்டை மூர்க்கத்தனமாக இருந்தது. ஜெர்மானிய விமானங்கள் எட்டு இருந்தன, சோவியத் விமானங்கள் இரண்டே இரண்டுதான் — தைமூருடையதும் விமானி ஷூதவுடையதும். தைமூர் ஒரு மெஸ்ஸெர்ஷ்மீட்டைச் சுட்டு வீழ்த்தினான், பிறகு இரண்டாவதை, ஆனால் அக்கணத்தில், எதிரி சண்டை விமானங்கள் எங்கிருந்தோ தோன்றி தைமூருடைய விமானத்தைத் தாக்கின... அவன் ஒரு வீரனுக்குரிய சாவு எய்தினான் — அவன் பின்வாங்கவில்லை, கடைசி வரைத் தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டிருந்தான். சாவிற்குப் பிறகு அவனுக்கு நாட்டினுடைய உயர்தர விருது — 'சோவியத் யூனியனின் வீர' விருது — வழங்கப்பட்டது.''

ஸ்தாரயா ரூஸ்ஸா!.. இந்தப் பெயரை எங்கோ முன்னர் தைமூர் சரோக்கின் கேள்விப்பட்டிருக்கிறான். தாத்தா! தைமூருக்குப் போரைப் பற்றிச் சொல்கின்ற வேளையில் அவனுடைய தாத்தா அடிக்கடி ஸ்தாரயா ரூஸ்ஸாவைக் குறிப்பிட்டார். அவனுடைய தாத்தா சண்டையிடும் விமானி, அந்தப் பகுதியில் பறந்தான். தைமூர் ஃப்ரூன்ஸேயும் அங்கே விமானியாகச் சண்டையிட்டான். அதோ! அவருடைய பெயரே இவனுக்கும் வைக்கப்பட்டிருக்கிறது!

## சூரியக் கதிர்களும் தீக்குச்சிகளும்

எல்லாக் குழந்தைகளுமே நெகிடிகளைப் பற்றவைக்கவும் அதனருகே குளிர்காயவும் விரும்புவார்கள், வான்யா நிக்கீதின் இதற்கு விதிவிலக்கன்று. ஆகவே ஆர்தெக் வந்த உடனேயே, அவன் செய்த முதலாவது காரியங்களில் ஒன்று **நெகிடிச் சதுக்கத்தைத்** தேடியதாகும்.

அதைக் கண்டுபிடித்த போது, உண்மையில் அந்த இடந்தான் என்பதில் அவன் முற்றிலுமாக நம்பிக்கை கொள்ளவில்லை. அந்தச் சதுக்கம் பெரும்பாலும் ஒரு விளையாட்டரங்கம் போலவே காணப்பட்டது. பலகை இருக்கைகள் கூட இருந்தன. விளையாட்டரங்கின் 'களம்' மட்டுமே ஓரளவு வழமையற்றதாகக் காணப்பட்டது. அந்தக் களத்தில் தான் விழா நாள்களிலும், விஷேடமான கொண்டாட்டங்களிலும் நெருப்பு மூட்டப்பட்டது.

மையத்தில் சிறுதூறுகள் சுத்தமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன, அதற்குப் பக்

கத்தில் இரு பையன்கள் குந்தி உட்கார்ந்து, சுறுசுறுப்பாக ஏதோ செய்துகொண்டு இருந்தார்கள். ஒரு பையன் சணல் நிற முடிகொண்டவன், மற்றவன் கறுத்த முடி கொண்டவன்.

''அது தான் நெகிடி, சரியா?'' வான்யா கேட்டான்.

''அது நெகிடியாக இருக்கும்,'' அவர்களில் ஒருவன் சொன்னான். ''நீ புதிதாக வந்தவனா?''

''ஆமாம்,'' வான்யா தலையாட்டினான்.

''இந்த நெருப்பு உனக்காகவும், பிற புதிதாக வந்த எல்லாருக்காகவும்.''

''நீங்கள் யார், பாதுகாவலர்களா?'' வான்யா கேட்டான்.

''என்ன மாதிரியான பாதுகாவலர்கள்?'' கறுத்த முடிகொண்ட பையன் வியப்புற்றான்.

''நெகிடிப் பாதுகாவலர்கள்,'' வான்யா பதிலளித்தான்.

பையன்கள் சிரித்தார்கள்.

''ஆர்தெக்கில் எந்தக் காவலர்களும் இல்லை. எல்லாமே திறந்திருக்கும். விரும்பிய எந்த இடத்திற்கும் நீ போக முடியும். யாரிடமிருந்து அவற்றைக் காப்பாற்ற வேண்டும்? ஆர்தெக் நமக்குச் சொந்தமானது.''

''பிறகு நீங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' வான்யா கேட்டான்.

''நாங்கள் நெருப்பு மூட்டிக் கொண்டிருக்கிறோம். இந்த பூதக்கண்ணாடியைப் பார்?''

பையன்களில் ஒருவன் கையில் வைத்திருந்த குவி ஆடியை வான்யா பாராட்டினான்.

''அதில் சூரியனுடைய கதிர்களைப் பிடித்து, துண்டுத் தாளுக்கு நெருப்பு மூட்டுகிறோம். பிறகு அந்தத் தாளைக் கொண்டு தீப்பந்தத்தை ஏற்றுகிறோம், இதோ. பிறகு தீப்பந்தத்தால் நெகிடியைப் பற்றவைக்கிறேன். நாங்கள் சூரியனிலிருந்து நெகிடியைப் பெறுகிறோம்.''

தடுமாற்றத்தில் வான்யா தனது தோள்களைக் குலுக்கிக் கொண்டான்.

''ஏன் சூரியனிலிருந்து? நிறைய வேலை இருப்பது போலத் தெரிகிறது. வெறுமனே ஏன் தீக்குச்சிகளை நீங்கள் பயன்படுத்தக் கூடாது? இதோ, என்னிடம் சில இருக்கின்றன,'' என்று சொல்லிப் பையன்களிடம் ஒரு தீப்பெட்டியை நீட்டினான்.

ஆனால் அவர்கள் இருவரும் முகஞ்சுளித்தார்கள்.

''தீக்குச்சிகளால் கூடாது,'' என்றான் ஒருவன்.

''அது குறியீடு அன்று,'' என்றான் இரண்டாமவன்.

''சூரியன்தான் உயிர்களுக்கு ஆதாரமாக இருக்கிறது, நமது நெருப்புங் கூடத் தான். நீ புரிந்து கொண்டாயா?''

''ஆமாம்,'' என்ற வான்யா தீக்குச்சிகளை அப்பால் வைத்தான். ''நான் உங்களுக்கு உதவ முடியுமா?''

''நல்லது, தீப்பந்தத்தைப் பிடித்துக் கொள்,'' சணல் நிற முடிகொண்ட பையன் சொன்னான். திடீரென்று கடலிலிருந்து வீசிய காற்றிலிருந்து தாளை அவன் பாதுகாத்து, தாளின் மீது சூரியனுடைய கதிர்கள் விழுமாறு பூதக்கண்ணாடியை அசைக்கத் தொடங்கினான்.

# சந்திப்பு

கடலிலிருந்து, வானவில்லின் எல்லா நிறங்களுடனும் ஆர்தெக் மினுமினுக்கிறது, ஆனால் இன்றோ ஒரு வர்ணம் மேலோங்கி யிருந்தது — சிவப்பு. 'குழந்தைகளுடைய குடி யரசின்' கடற்கரை நெடுகிலும் நெகிடிகள் சுடர்விட்டெரிகின்றன. இன்று வெற்றி விழா. பெயரறியா மாலுமியின் கல்லறையி லுள்ள அணையா விளக்கால் ஏற்றி வைக்கப் பட்ட அந்த நெகிடிகள்! மாபெரும் தேச பக்தப் போரில் சோவியத் யூனியன் வெற்றி கொண்டதைப் போற்றி அவை எரிகின்றன.

சோவியத் யூனியனில் கொண்டாடப்படும் எல்லா விழாக்களிலும், வெற்றி நாள் சிறப்பானது. அது அதே வேளை துக்கம் தோய்ந்ததும் மகிழ்ச்சி மிக்கதுமாகும். துக்கம் தோய்ந்தது ஏனென்றால், மே 9இல், போர்க்களத்தில் உயிர் நீத்தவர்களுக்கு மரியாதை செய்யும் வகையில் கண நேர மௌனம் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் கடைப்பிடிக்கப்படு கிறது; மகிழ்ச்சி மிக்கது ஏனென்றால் 1945இல் அன்றைய நாளில் பயங்கரமான போர் முடிந்து, நாஜி அச்சுறுத்தலினின்றும் ஐரோப்பா விடுவிக்கப் பட்டது. அது சமாதானத்தின் விழா நாள்; சோ வியத் மக்கள் "போரே வேண்டாம்!" என உறுதி யோடு திரும்பச் சொல்கிற நேரம் அது.

மிகப்பெரிய வர்ண பலூன்கள் மெது வாகக் காற்றில் பறக்கின்றன. அவை சாதா ரண பலூன்கள் அல்ல, அவை தபால் பலூன்கள், அவை வெறுமனே ஆர்தெக் கிற்கு மேலாக, சூரிய ஒளிமிக்க, மேகங் களற்ற வானத்தின் நெடுகிலும் பறக்கவில் லை, ஆனால் வழமையற்ற முகவரியுடன் கூடிய கடிதங்களை அவை எடுத்துச் செல் கின்றன: ஆர்தெக் குழந்தைகளிடமிருந்து உலக மக்களுக்கு. அந்தக் கடிதங்களில் சமாதானத்திற்காகப் பாடுபடும்படி வேண்டு கோள் இருக்கிறது.

படகுகள் கடலுக்குள் செல்கின்றன. எல்லா வகையான இனங்களையும் சேர்ந்த, உலகின் எல்லா மூலைகளிலிருந்தும் வந்த சிறுவர்களாலும் சிறுமிகளாலும் நிறைந்து



உள்ளன. இரண்டாம் உலகப் போரில் இறந்த சோவியத் மாலுமிகளின் நினைவுக்காக அவர்கள் மலர்வளையங்களைச் சுமந்து செல்கின்றனர். அவற்றை அவர்கள் கடலுக் குள்ளாகக் கவனமாக இறக்குவார்கள், அவை பல்வேறு நாடுகளின் கடற்கரைகளுக்கு எடுத்துச் செல்லப்படும்.

பெர்லினிலிருந்து வந்த தனது பேனா நண்பர்களைக் கண்டுபிடிக்கும் நம்பிக்கை யோடு மாஸ்கோவிலிருந்து ஆர்தெக்கிற்கு வந்தவள் ஓல்யா கலவானவா. மாஸ் கோவிலுள்ள அவளது பள்ளியும் பெர்லினிலுள்ள பள்ளி ஒன்றும் வெற்றி வணக்க விழாவை ஆரம்பித்து வைத்தவை. எல்லா சோஷலிச நாடுகளின் குழந்தைகளுக்கும் இரண்டாம் உலகப் போர் முடிவின் முப்பதாவது ஆண்டு விழாவைக் கூட்டங் களுடனும், இசை நிகழ்ச்சிகளுடனும் கொண்டாடி மிக முக்கிய விழா கொண்டாட்டங் களை ஆர்தெக்கில் நடத்துமாறு பள்ளி மாணவர்கள் வேண்டுகோள் விடுத்தனர்.

இப்போது ஓல்யா ஆர்தெக்கில் இருந்தாள். பன்னிரண்டு, பதின் மூன்று, பதி னான்கு, பதினைந்து வயதுள்ளவர்களின் பெருங்கடலில் அவள் ஒரு சிறிய மனிதத்துளி.



அவள் மாஸ்கோவை விட்டுப் புறப்பட்ட போது, அவளுடைய பள்ளித் தோழிகள், அவர்களுடைய பெர்லின் பேனா நண்பர்களை எப்படிக் கண்டுபிடிப்பது என்பது பற்றி அவளுக்கு அறிவுரை கூறியிருந்தார்கள்:

''பாடலைக் கொண்டு அவர்களைத் தேடு. அதை நாம் பொதுவாகக் கொண்டிருக் கிறோம். அதைப் பாடு, அவர்களை நிச்சயமாக நீ கண்டுபிடிப்பாய்.''

ஆனால் அவள் அதை எப்படிச் செய்ய முடியும்? அங்கே நின்று அவள் பாடினால், அவள் வித்தியாசமானவள் என்று மக்கள் நினைப்பார்கள். முகாமைச் சுற்றிலும் நடந்து பாட்டை மெல்லப் பாடுவது என்று முடிவு செய்தாள். எப்போது அவள் பாடத் தொடங்கினாளோ, அப்போது அறிமுகமான ராகத்தை அவள் கேட்டாள். வட் டமுகங் கொண்ட சிறுவன் ஒருவன் உரக்கப் பாடிக்கொண்டிருந்தான்:

பெரிய நதியும் தொடங்குது
சிறிய ஓடையி லிருந்து...

ஆனால் அவன் ஜெர்மானியப் பையனாக இருக்க முடியாது. இல்லை, அவன் ஒரு ருஷ்யன். அவள் அவனைக் கடந்து சில எட்டுகள் போன பிறகு, யாரோ அரைகுறை ருஷ்யனில் அதே பாடலைப் பாடிக் கொண்டிருப்பதைக் கேட்டாள். அவள் விரைந்து சுற்றிலும் திரும்பினாள். நீலநிற ஆர்தெக் சீருடையில் இருந்த சிறுமி ஒருத்தி பைய னுக்குப் பக்கத்தில் நின்று அந்தப் பையனை வைத்தகண் வைத்தபடி பார்த்தாள். பாட்டு முடிந்ததும் அவன் மாஸ்கோவிலிருந்து வந்தவனா எனக் கேட்டாள்.

''இல்லை,'' என்றான், ''நான் கஸ்த்ரொமாவிலிருந்து வந்தவன்.''

''நான் மாஸ்கோவிலிருந்து!'' என்ற ஓல்யா அவளிடம் ஓடினாள். ''நீ பெர்லினி லிருந்தா?''

''ஆமாம், ஆமாம், பெர்லினிலிருந்து!'' என்று அச்சிறுமி மகிழ்ச்சியோடு பதிலளித் தாள்.

இவ்வாறாகத்தான் மாஸ்கோவிலிருந்து வந்த ஓல்யா கலவானவாவும், பெர் லினிலிருந்து வந்த ஜென்னி மார்டினும், **வெற்றி வணக்க** விழாவைத் தொடங்கி வைத்த இருவரும், சந்தித்தார்கள்.

## மிக முக்கியமானது

பிரெஞ்சு முகாம்காரர்களில் மிகச் சிறியவள் சிமோனா பஸ்தேர், ஆனால் அவள் மிகுந்த முனைப்பும் சுறுசுறுப்பும் ஆர்வமும் நிறைந்தவள். பனிப்பெண் பற்றிய ருஷ்ய நாடோடிக் கதை திரைப்படம் ஒன்றை அவள் பார்த்திருந்தாள். அப்படத்தில் பனிப் பெண் ஒரு நெகிடியைத் தாண்டினாள். அவளைப் போலவே செய்ய வேண்டும் என சிமோனா முடிவு செய்தாள். நெகிடி போடும்படி குழந்தைகளைத் தூண்டினாள். அது நன்றாக எரிந்த போது அவள் கத்தத் தொடங்கினாள்:

''தாவுங்க! தாவுங்க!''

ஆனால் யாரும் அசையவில்லை. அவர்கள் பயந்து போனார்கள். சிமோனா ஓட்டம் எடுத்து நெருப்புக்கு மேலாகத் தாவினாள். மற்றவர்களும் தொடர்ந்தார் கள். அக்கணத்தில் குழுத் தலைவி ஸோயா அங்கே ஓடிவந்து குழந்தைகளை நிறுத் தினாள். அவர்களுக்கு அது வேடிக்கை, ஆனால் அவளுக்கோ யாரேனும் தீக்காயம்






சோவியத் யூனியன் முழுமையிலிருந்தும் பல வெளிநாடுகளிலிருந்தும் குழந்தைகள் ஆர்தெக்கிற்கு வருகிறார்கள்.

இங்கே அவர்கள் எல்லாரும் ஒரு பெரிய, சர்வதேசக் குடும்பத்தவராக மாறுகிறார்கள்.









பட்டுவிட்டால் மிகப் பெரிய பிரச்சினை.

எல்லா முகாம்காரர்களிலும் சிமோனா சுறுசுறுப்பானவள். கண நேரத்திற்கும் அவள் அப்படியே இருந்ததில்லை. குரங்கைப் போல உயரமான சைபிரஸ் மரத்தின் மீது தொற்றுவாள், அல்லது மற்ற குழுவினர்களை விட விரைவாகக் கடலுக்குள் நீந்துவாள், ஒரு டால்பினைப் போலப் பாசாங்கு செய்தபடி.

ஆனால் சிமோனா துணிச்சலும், ஊக்கமும் மட்டுமே உடையவள் அல்லள். மிகுந்த ஆர்வமும் கொண்டிருந்தாள். ஒருநாள் 'இன்டர்நேஷனல்' என்ற சொல் எதைக் குறிக்கிறது என்று ஸோயாவிடம் கேட்டாள். ஆர்தெக்கில் இருந்த பல சுவரொட்டிகளில் அதை அவள் கவனித்திருந்தாள்.

ஸோயா எல்லாவற்றையும் அறிந்தவள்—ஆகவே தான் அவள் ஆர்தெக் குழுத் தலைவியாக இருந்தாள். அவளுக்குத் தெரிந்தவற்றைக் குழந்தைகளுக்குக் கற்பித் தாள்: நெகிடியைப் பற்றவைப்பது எப்படி, பிறகு சாம்பலில் உருளைக்கிழங்குகளைச் சுடுவது எப்படி, மாலுமி முடிச்சுகளைக் கட்டுவது எப்படி, மீன் பிடிப்பது எப்படி, பல்வேறு வகையான விளையாட்டுகளை ஆடுவது எப்படி, பொம்மைகள் செய்வது எப்படி. தேவை ஏற்பட்டால் முதலுதவி கூட அவளால் கொடுக்க முடியும். ஆகவே, இயல்பாகவே, 'இன்டர்நேஷனல்' என்றால் என்ன என்பது ஸோயாவுக்குத் தெரிந் திருந்தது.

"Inter என்றால் லத்தீனில் 'இடையே' எனப்படும். Natio என்றால் 'ஒரு நாட்டு மக்கள்' எனப்படும். ஆகவே இன்டர்நேஷனல் என்றால் பல்வேறு நாட்டு மக்களுக் கிடையேயான ஒற்றுமை எனப்பொருள்படும்,'' என்றாள்.

''இப்போது நான் புரிந்து கொண்டேன்,'' என்றாள் சிமோனா, ''பிறகு ஆர்தெக் கும் இன்டர்நேஷனல் தான்!''

''அது சரிதான்,'' என்று ஸோயா ஒப்புக்கொண்டாள். ''அது இன்டர்நேஷனல் ஏனெனில் உலகமெங்கிலுமிருந்து வந்த குழந்தைகளை ஒருசேர அது கொண்டு வருகிறது. ஆர்தெக்கிற்கு வேறு என்ன நோக்கம் இருக்கிறது, உன்னால் ஊகிக்க முடியுமா?''

''நிச்சயமாக,'' என்றாள் சிமோனா. ''குழந்தைகளை மகிழ்ச்சியாகவும், நலமாக வும் இருக்கச் செய்ய.''

''அது மட்டுமன்று,'' குழுத் தலைவி பதிலளித்தாள். ''ஆர்தெக்கிற்கு மற்றொரு மிக முக்கியமான லட்சியம் இருக்கிறது.''

''அது என்ன?'' என்றாள் சிமோனா.

''நாம் தெரிந்து கொள்வோம்,'' என்றாள் ஸோயா. ''அங்கே பார், நெகிடிச் சதுக்கத்தில் குழந்தைகள் பலூனை விட்டுக் கொண்டிருக்கிறார்கள். நாம் அவர்களிடம் போகலாம்.''

அவர்கள் அங்கே சென்று நெருப்பு எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். அதற்கு மேலாகக் கயிறுகளில் ஒரு பலூன் தொங்கியது. அது மொங்கோல்பியே பலூன். நெருப்பிலிருந்து கிடைக்கும் வெப்பக் காற்று அதை உயரே போக வைக்கிறது. பலூன் காகிதத்தால் செய்யப்பட்டது, பல மொழிகளில் அதன் மீது 'நாங்கள் சமா தானத்திற்காக இருக்கிறோம்' என எழுதப்பட்டிருந்தது. அதற்குக் கீழாக உலகமெங் கிலுமிருந்து வந்த குழந்தைகளின் பல கையெழுத்துகள் இருந்தன.

''நானும் அதில் கையெழுத்திட முடியுமா?'' சிமோனா கேட்டாள்.

''நிச்சயமாக,'' என்ற குழுத் தலைவி அவளிடம் ஒரு சிவப்புப் பென்சிலை ஒப்படைத்தாள்.

பலூன் மீது அந்த பிரெஞ்சுச் சிறுமி 'சிமோனா பஸ்தேர்' என்று எழுதினாள். பிறகு சிறார்கள் பலூனை நிறுத்தி வைத்திருந்த கயிறுகளை விட்டு விட, அது, எல்லா ஆர்தெக் முகாம்காரர்களும் — ருஷ்யர்கள், ஆங்கிலேயர்கள், பிரெஞ்சுக்காரர்கள், ஜெர்மானியர்கள், போலந்துக்காரர்கள், ஹங்கேரியர்கள் — சமாதானத்திற்காக இருக்கிறார்கள் என்ற செய்தியைச் சுமந்தபடி பறந்தது.

பலூன் பறந்து போன போது, இன்டர்நேஷனல் நட்புறவின் மிக முக்கியமான பங்கு என்னவென்று ஸோயா சிமோனாவிடம் கேட்டாள்.

''சமாதானத்திற்காகப் போராடுவது,'' என்று எந்தவிதத் தயக்கமின்றிக் கூறினாள் சிமோனா. நீல வானத்தில் மிதந்து சென்ற பலூனைக் கவனித்தாள்.

## குட்டிக்கரண நிகழ்ச்சி

ஒரு படகு மிதந்து சென்றது. அது பனிப்பாறை போலக் காணப்பட்டது. கடற்கரையில் நின்று வாஸ்யா அந்திரேயெவ் நீண்ட நேரமாக அதைக் கவனித்தான். அது மெதுவாக நகர்ந்து சென்று, தொடுவானத்திற்கு அப்பால் மறையத் தொடங்கியது.

வாஸ்யா சுற்றிலும் பார்த்து ஓர் உயரமான மரத்தைக் கவனித்தான். ''உச்சிக்கு நான் ஏறினால், தொடுவானத்திற்கு மேலாக என்னால் பார்க்க முடியும்,'' என ஊகித்தான். மரத்தின் மீது தொற்றி ஏறி, படகைத் திரும்பவும் பார்த்தான். திடீரென்று யாரோ அழைப்பதைக் கேட்டான்:

''வாஸ்யா அந்திரேயெவ், பயொனீயர் அறைக்குப் போ.''

அவன் வியப்புற்றான். ஒருவேளை ஆர்தெக்கில் மரங்களின் மீது ஏறுவதை அநுமதிக்காது இருக்கக் கூடும். யாரேனும் அவனைப் பார்த்திருக்கக் கூடும், ஆகவே தான் அவன் அழைக்கப்பட்டான். அதைக் கேட்கவில்லை என்று அவனால் பாசாங்கு செய்ய முடியும், ஆனால் அது நேர்மையாக இருக்காது. போய் உண்மையைச் சொல்வதுதான் நல்லது. அப்போதைக்குத்தான் அவன் ஆர்தெக்கிற்கு வந்து சேர்ந்திருக்கிறான். அவனுக்கு இன்னமும் விதி முறைகள் தெரியாது. கடைசி முறையாகப் படகைப் பார்த்துவிட வேண்டும் என்பதற்காக மட்டுமே அவன் மரத்தில் ஏறியிருக்கிறான்.

வாஸ்யா கீழே இறங்கி பயொனீயர் அறைக்கு ஓடினான். உள்ளே சென்று துணிவுடன் அறிவித்தான்:

''மரத்தில் ஏறியவன் நான் தான்.''

''நல்லது, அது எப்படியிருந்தது?'' குழுத் தலைவர் யூரா கேட்டார்.

''நீங்க என்ன சொல்றீங்க?'' வாஸ்யா புரிந்து கொள்ளவில்லை.

''ஏறியது எப்படியிருந்தது? எதையும் பிளக்கவில்லையே?''

வாஸ்யா தொட்டுப் பார்த்துக்கொண்டு மகிழ்வுடன் முறுவலித்தான்.

''எதுவும் பிளக்கவில்லை. ஒவ்வொன்றும் சரியாகவே இருக்கிறது,'' என்றான். தான் திட்டப்படவில்லை என்பதற்காக மகிழ்ந்தான்.

ஆனால் எதற்காக அவனை வரச் சொன்னார்கள்?

பையன் என்ன நினைத்துக் கொண்டிருந்தான் என்பதை ஊகித்த யூரா ஒலி பெருக்கியைச் சுட்டிக்காட்டிச் சொன்னார்:

''நமது முகாம் வானொலி.''

''ஆகவேதான் அவர்கள் அழைத்தார்கள். வானொலி எப்படி வேலை செய்கிறது என்பதை எனக்குக் காட்டுவதற்கு அவர்கள் விரும்புகிறார்கள். அருமை! அது ஆர்வமூட்டக் கூடியதாக இருக்கும்,'' வாஸ்யா எண்ணிக்கொண்டான்.

ஆனால் அவன் தவறாகப் புரிந்துகொண்டான். வரச் சொன்னதற்கு வேறொரு காரணம் இருந்தது. இரண்டு நாள்களுக்கு முன்னால் அக்குழுவில் அறிமுக மாலை நிகழ்ச்சி நடைபெற்றது, அப்போது புதிதாக வந்தவர்கள் தங்களைப் பற்றி ஓரளவு கூறி, தங்களுடைய திறமைகளைக் காட்டினார்கள். சிலர் பாடினார்கள், மற்றவர்கள் ஆடினார்கள், வேறு சிலர் கவிதைகளை ஒப்பித்தார்கள். பிறகு வாஸ்யாவினுடைய முறை வந்தது.

''உன்னால் என்ன செய்ய முடியும்?'' யூரா கேட்டார். ''நீ பாடுவாயா அல்லது ஆடுவாயா?''

வாஸ்யா தனது தோள்களைக் குலுக்கிக் கொண்டான். அவனுக்குத் தெரியாது.

''உனக்குப் பாடத் தெரியுமா?'' யூரா கேட்டார்.

''தெரியாது,'' எனப் பதிலளித்தான் வாஸ்யா.

''ஆட?''

''தெரியாது.''

''அக்கார்டியன் வாசிக்க?''

''தெரியாது.''

''எதில் நீ சிறந்தவன்?''

''கட்டளைகளிடுவதில்,'' வாஸ்யா விரைந்து விடையளித்தான்.

''உண்மையாகவா?'' யூரா வியப்பில் கேட்டார். ''சரி, மையத்திற்குப் போய்க் கட்டளையிடு.''






வட்டத்தின் மையத்திற்கு வாஸ்யா சென்று, உரத்த, தெளிவான குரலில் கத்தினான்:

''பயிற்சிகளுக்காக நில்லுங்கள்! வலப் புறம் வட்டமாக ஓடுங்கள்! ஆரம்பியுங்கள்!''

அது மிகவும் வழமையற்றதாகவும், எதிர் பாராததாகவும் இருந்ததால் குழந்தைகள் உடனடியாக உற்சாகமான கட்டளை களுக்குக் கீழ்ப்பட்டு ஒரு வட்டமாக நகரத் தொடங்கினார்கள்.

வாஸ்யாவைக் கவனித்த யூரா அவனுக்கு ஒரு முக்கியமான வேலை கொடுக்க முடிவு செய்தார். அதற்காகத் தான் அவனை அழைத்தார்.

''உனக்கு அருமையான குரல் இருக் கிறது,'' என்றார். ''நீ நம்முடைய அறிவிப் பாளனாக வேண்டும் என நான் விரும்புகி றேன்.''

அறிவிப்பாளன்! வாஸ்யா துணிச்சல் மிக்கவன். ஆர்தெக்கிற்கு அவன் வந்த போது, முன்னர் ஒருபோதும் அவன் கடலைக் கண்டதில்லை என்றாலும், நீரில் குதித்து நீந்தத் தொடங்கிவிட்டான். சின் னஞ்சிறிய ஒலிபெருக்கிக்கு அவன் பயப்பட மாட்டான்.

எப்படிப் பேசுவது என்பதைக் குழுத் தலைவர் அவனுக்கு விளக்கி, வாசகத்தை அவனிடம் கொடுத்து, ஒலிபெருக்கியை ஒப் படைத்து, தொடங்கச் சைகை காட்டி னார். வாஸ்யா ஒலிபெருக்கியை எடுத்து அதைத் தனது வாயருகே கொண்டு சென் றான்... மௌனம். யூரா அதை நிறுத்தி விட்டுக் கேட்டார்:

''என்ன விஷயம்?''

''நான் கலக்கமுற்றுப் போனேன்,'' என்று வாஸ்யா பதிலளித்தான்.

''அது பற்றிக் கவலைப்பட வேண்டாம். நாம் திரும்பவும் முயலலாம்.'' அவர் ஒலிபெருக்கியை இயக்கினார்.

''கவனிக்க, கவனிக்க, தயவுசெய்து. இது முகாம் வானொலி. இன்று மாலை







நெகிடிச் சதுக்கத்தில் முதலாவது குழு வைச் சேர்ந்த முகாம்காரர்களால் நிகழ்ச்சி நடத்தப்படும்...''

அத்துடன் பேச்சை வாஸ்யா நிறுத்தி அறிவிப்பை மீண்டும் கூற வேண்டும், ஆனால் மாறாக அவன் தொடர்ந்தான்:

''குட்டிக்கரண நிகழ்ச்சியுடன் அதில் பங்கு பெறுமாறு காத்யா மலாகொ வாவை நாங்கள் கேட்டுக் கொள் கிறோம்.''

யூரா ஒலிபெருக்கியை விரைந்து நிறுத்திவிட்டு வாஸ்யாவிடம் கூக் குரலிடத் தொடங்கினார்:

''நீ வெட்கப்பட வேண்டும்! ஒலி பெருக்கி விளையாட்டுப் பொருளன்று! சொல்ல விரும்பியதெல்லாவற்றையும் ஒலிபெருக்கியில் கூற நீ அநுமதிக்கப் படவில்லை!''

''அது நான் விரும்புவது அன்று,'' என்றான் வாஸ்யா, ''ஆனால்





ஒவ்வொருவரும் விரும்புவது. காத்யா குட்டிக்கரணமிடுபவள், ஆனால் செய்ய அவள் கூச்சப்படுகிறாள். பங்கு கொள்ளும்படி அவளிடம் நான் கேட்டேன், ஆனால் அதைச் செய்ய அவள் விரும்பவில்லை. இப்போது அவள் மறுக்க மாட்டாள் ஏனென்றால் முகாம் முழுக்கவே கேட்கிறது.''

காத்யா மறுக்கவில்லை.

## மந்திரக் கட்டடம்

குன்றின் அடிவாரத்தில் ஒரு சிறிய கண்ணாடிக் கட்டடம் நிற்கிறது.

''என்ன அது?'' வீக்கா ஆர்தெக் சுற்றுலாவின் போது தனது குழுத் தலைவியிடம் கேட்டாள்.

''நமது முழு முகாமிலும் மிகவும் மாயமான இடம் அதுதான்,'' என்று குழுத் தலைவி பதிலளித்தாள்.

''அது கண்ணாடியில் ஆனதால் அங்கிருந்து ஆர்தெக் முழுவதையும் காண முடியுமா?'' என வீக்கா ஆர்வத்தோடு கேட்டாள்.

''ஆர்தெக்கை மட்டுமன்று, இந்த உலகம் முழுவதையும்,'' என்று அவளுடைய குழுத் தலைவி கூறினாள்.

அந்த மந்திரக் கட்டடத்திற்குச் சென்று உலகத்தைப் பார்ப்பதென்று வீக்கா முடிவு செய்தாள். கண்ணாடிக் கட்டடம் வரை நடந்து சென்றாள். ''நூலகம்,'' என ஊகித்தாள். கதவைத் திறந்து புத்தகங்களின் அரசுக்குள்ளாக நுழைந்தாள். அவளுக்கு விருப்பமான பழைய நண்பர்கள் எல்லாரும் அலமாரிகளில் இருந்தனர்: ராபின்சன் குரூஸ், கலிவர், அதிசய உலகத்து அலீஸ், டாம் . ஸோய்யர், ருஸ்லான் மற்றும் லியுத்மீலா, செம்பு மலையின் எசமானி, இளவரசன் இவான் மற்றும் பலர்.

வீரன் ருஸ்லானும், அழகிய இளவரசி லியுத்மீலாவும் பூஷ்கினுடைய தேவதைக் கதையின் கதாநாயகர்கள். பூமியினுடைய பாதாளச் செல்வத்தைப் பாதுகாக்கும் செம்பு மலையின் எசமானி, தனது எண்ண முடியாத செல்வங்களை அன்பான, நேர்மையான மக்களுக்கும், சுயநலமற்ற, திறமைவாய்ந்த கைவினைஞர்களுக்கும் வெளிப்படுத்துகிறாள். இளவரசன் இவான் பல ருஷ்ய நாடோடிக் கதைகளின் பிரபலமான கதாநாயகன் ஆவான்.

எல்லாப் புத்தகங்களுமே அலமாரிகளில் இருப்பதும், அவற்றை யாரும் வெளியே எடுக்காததும் வீக்காவுக்கு வியப்பளித்தது.

''அது ஒருகால் புதிதாக வந்தவர்களுக்கு நூலகம் எங்கே இருக்கிறது என்பது தெரியாததால் இருக்கலாம்,'' என்று நூலகர் கூறினாள்.

வீக்கா ஒரு புத்தகத்தை எடுத்துக் கொண்டு, தனது குழுவுக்குத் திரும்பச் சென்றாள். இரவுச் சாப்பாட்டுக்கு முன்னதாக, யாரேனும் நூலகத்திற்குச் சென்றதுண்டா எனக் கேட்டாள். ஒருவரும் செல்லவில்லை. அவள் தடுமாறிப் போய், மற்றவர்களுக்கும் படிப்பதில் ஆர்வம் ஏற்படுத்தத் தன்னால் என்ன செய்ய முடியும் என்பது பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தாள்.

மறுநாள் காலை தனது பிரிவினரைச் சந்தித்து ஒவ்வொரு பையனிடத்திலும் சிறுமியிடத்திலும் ஒரு துண்டுக் காகிதத்தைக் கொடுத்தாள். அதில் இவ்வாறு எழுதப்பட்டிருந்தது: ''அன்புள்ள நண்பா, இன்று நூலகத்திற்கு வருகை தருமாறு உன்னை நான்

அழைக்கிறேன்.'' அழைப்பிதழ்களின் மேல் கையெழுத்துகள் வித்தியாசமாக இருந்தன. ஒன்றில் 'ராபின்சன் குரூஸ்' என்றும்; மற்றதில் 'டாம் ஸோய்யர்' என்றும்; மூன்றாவதில் 'இளவரசன் இவான்' என்றும் கையெழுத்திடப்பட்டிருந்தன.

''நூலகம் எங்கே இருக்கிறது? அங்கு எப்படிப் போவது என்பதை எங்களுக்குச் சொல்!'' எனக் குழந்தைகள் எல்லாரும் கத்தினார்கள்.

காலையுணவுக்குப் பிறகு பிரிவினர் எல்லாரும் வீக்கா வழிகாட்ட நூலகத்திற்குப் புறப்பட்டனர்.

## 'எனக்கு இசை ஞானமில்லை'

ஆர்தெக்கில் ஒவ்வொருவரும் பாடுகின்றனர், நன்றாகப் பாட முடியாதவர்கள் கூட.

வோல்காகிராடிலிருந்து வந்த வலோதியா ஸ்மிர்னோவ் முன்னர் ஒருபோதும் பாடியதேயில்லை. அவனுடைய வழமையான சாக்கு 'எனக்கு இசை ஞானமில்லை' என்பது. டிரான்சிஸ்டரைத் திருகிப் பாடுவதை உன்னால் கேட்க முடியும் போது, எதற்குத் தானாகவே பாடுகிறாய்?

வலோதியா ஆர்தெக்கிற்கு வந்த போது, பாடுவதற்குத் தொடர்ந்து மறுத்துவந்தான், ஒவ்வொருவரும் நிறுத்தாமல் பாடிய போதும். ''எனக்கு இசை ஞானமில்லை,'' என்று விளக்கினான்.

ஆர்தெக்கே ஒரு பாடலைப் போன்றது. வலோதியா மலையின் மீது ஏறி, உட்கார்ந்து ஆர்தெக் இரைச்சல்களைக் கேட்க விரும்பினான். அலைகளின் ஒலி, சிறுவர்களின் குரல்கள், பறவைகளின் பாடல்கள், வாசிக்கப்படும் இசை, விளையாட்டரங்கிலிருந்து வந்த விளையாட்டு ரசிகர்களின் இரைச்சல்கள், ஸ்டார்ட் துப்பாக்கிகளின் வெடிப்புகள், மரங்களின் சலசலப்பு, பயணப்படகுகளின் சங்கொலிகள், — அவை எல்லாமே ஓர் அற்புதமான ராகமாக இணைந்து மாறியன, அதை அவனால் எப்போதுமே கேட்க முடியும். அவனைச் சுற்றிலும் ஒவ்வொன்றும் பாடிக் கொண்டிருக்கையில் ஏன் பாட வேண்டும்?

ஒருநாள் **வர்ண டைகள்** விழாவுக்குத் தயாராக இருக்குமாறு அவனுக்கு அறிவிக்கப்பட்டது.

''நான் எப்போதுமே தயார்,'' என்றான் வலோதியா.

''இந்த முறை நான் அவ்வளவு உறுதியாக இல்லை,'' என்று குழுப் பிரதிநிதிகளின் தலைவன் சொன்னான். ''நாம் பாடப் போகிறோம்.''

''எனக்கு இசை ஞானமில்லை,'' வலோதியா விரைந்து விடையளித்தான்.

''எனக்குத் தெரியும்,'' என்று தலைவன் கூறினான், ''ஆனால் எதற்கும் நீ ஏன் வார்த்தைகளைக் கற்றுக் கொள்ளக் கூடாது?''

''நல்லது, அவற்றை நான் கற்றுக் கொள்வேன்,'' வலோதியா உறுதி சொன்னான்.

வாக்குக் கொடுத்தால் அதைக் காப்பாற்ற வேண்டும். அதுதான் இளம் பயொனீயரின் இலட்சியம். ஆகவே பாடலை அவன் கற்றுக் கொள்வான்.

விழா நாளும் வந்தது. விளையாட்டரங்கின் பலகை இருக்கையில் அமர்ந்த வலோ

தியா பச்சைக் களத்துக்கு மேலாகப் பறந்து கொண்டிருந்த நீலப் பதாகையை உற்றுப் பார்த்தான். 'உலகக் குழந்தைகளின் வட்டம்' அதைக் கடந்து சென்றது. ஏராளமான குழந்தைகள் சர்வதேச நட்புறவு பற்றிய வாசகங்கள் எழுதப்பட்ட வெள்ளைக் காகிதப் புறாக்களைப் பதாகையோடு இணைத்திருந்தார்கள். தொடக்கத்தில் பாடல் அமைதியாக ஆரம்பமானது, பிறகு அது வலிமை பெற்று, பிற எல்லா ஒலிகளையும் தாழ்த்துகின்ற வரை மேன்மேலும் உரக்க ஒலித்தது. நாலாயிரம் சிறுவர்களும் சிறுமிகளும் ஒருவருக்கொருவர் தோள்களில் கைகளைப் போட்டபடி நின்று பாடினார் கள், இசையில் அவர்கள் மெய்மறந்து ஈடுபட்டார்கள்.

மற்றவர்களோடு நின்ற வலோதியா பாடாமல் தனது உதடுகளை அசைத்தான், ஆகவே அவன் வெள்ளைக் காக்காயாக இருக்கவில்லை. பிறகு திடீரென்று, தான் பாடப் போகிறோம் என்ற வித்தியாசமான உணர்வு அவனுக்கு எழுந்தது. அவனு டைய விருப்பத்திற்கு மாறாக அவனிடமிருந்து பாடல் வெளிக்கிளம்பியது, அவனே பெரிதும் வியப்புற்றபடி பாடினான். சுற்றிலும் உற்றுப் பார்த்தான், பல்வேறு வண்ண டைகளுடன் பாடிக் கொண்டிருந்த குழந்தைகளின் கடலையும், கீழே, மற்றொரு கடலையும் — பல்வேறு ஐரோப்பிய நாடுகளின் கடற்கரைகளைத் தழுவுகின்ற கருங் கடலையும் — கண்டான்.

''நட்புறவு!''... ''சமாதானம்!''... ''சுதந்திரம்!''... ''மகிழ்ச்சி!'' என்று ஆர்தெக் பாடியது. வலோதியாவும் எல்லாருடனும் பாடினான்.

## பாடுகின்ற களிமண்

ஆர்தெக்கில் உள்ள குழந்தைகள் வெறுமனே குழந்தைகள் அல்லர் — அவர்கள் ஒருமுகப்படுத்தப்பட்ட குழந்தைகள். முகாம்காரர்களின் மிகச் சிறிய பகுதி பிரிவு, சில பிரிவுகள் சேர்ந்தது ஒரு குழு, பல குழுக்கள் சேர்ந்தது ஓர் அணி (**அம்பர், வைரம், பளிங்கு, களம், காடு, ஆறு, ஏரி** அணிகள் போன்றன சில). கோடைக் காலத் தின் போது முப்பது நாள்களுக்காகவும், குளிர்காலத்தின் போது நாற்பது நாள் களுக்காகவும் குழந்தைகள் ஆர்தெக்கிற்கு வருகிறார்கள். அக்காலம் முழுக்க செய் வதற்காக அவர்கள் எதையாவது தேட வேண்டியதில்லை. வேலைதான் அவர்களைக் கண்டுபிடிக்கிறது.

ஒரு குழுவுக்கு பல்வேறு வகையான பொறுப்புகள் இருக்கின்றன. குழுப் பிரதிநிதி கள், பிரிவுத் தலைவர்கள், எக்காளம் ஊதுவோர்கள், முரசு வாசிப்பவர்கள், பாடகர் குழு இயக்குநர்கள், நெகிடி பற்றவைப்பவர்கள், அணிவகுப்பின் தலைவர்கள், மருத்துவ உதவியாளர்கள், ஆட்டக் குழுத் தலைவர்கள் நடுவர்கள், விளையாட்டு மற்றும் நடன அமைப்பாளர்கள் இப்படிப் பலப்பல.

ஆனால் ஆர்தெக்கிற்கு மற்றவர்களைக் காட்டிலும் சற்றுப் பின்னதாக வித்யா குர்யுச்கோவ் வந்து சேரும்படி ஆயிற்று, ஆகவே எல்லாப் பொறுப்புகளும் கொடுக்கப் பட்டு விட்டன.

''பரவாயில்லை,'' என்று அவனுடைய குழுத் தலைவர் போர்யா கூறினார். ''நீ கிராமப்புறத்திலிருந்து வருகிறாய், அப்படித் தானே? உன் அப்பா என்ன செய் கிறார்?''

''அவர் ஒரு விவசாயி,'' வித்யா பதிலளித்தான்.

''வேறு என்ன?'' போர்யா கேட்டார்.

''வெறுமனே விவசாயிதான்,'' வித்யா கோபமாகச் சொன்னான்.

ஆனால் அவனுடைய குழுத் தலைவர் பொறுமையாக இருந்தார்.

''ஒவ்வொருவரும் வேலைக்குப் பிறகோ வார முடிவுக்குப் பிறகோ ஏதாவது செய்கிறார்கள்,'' என்றார். ''சிலர் வரைகிறார்கள், மற்றவர்கள் படங்கள் எடுக்கிறார்கள், வேறு சிலர் மீன்பிடிக்கப் போகிறார்கள்.''

''ஓ, அது தான் நீங்க சொல்வது! என் அப்பா களிமண் வேலை செய்கிறார்.''

''உன்னைப் பற்றி என்ன?''

''நானுங் கூடத்தான்,'' வித்யா நாணத்துடன் சொன்னான்.

''களிமண்ணிலிருந்து பொருள்கள் செய்வது பற்றி மற்றவர்களுக்கு நீ ஏன் கற்பிக்கக் கூடாது,'' போர்யா ஆலோசனை சொன்னார்.

வித்யா கிளர்ச்சியுற்று, தொடங்க ஆர்வங் கொண்டான்.

''நல்லது,'' என்றான். ''நான் அவர்களுக்குக் கற்பிப்பேன், பிறகு நீங்கள் கேட்பீர்கள்.''

'நீங்கள் பார்ப்பீர்கள்' என்பதற்கு மாறாக 'நீங்கள் கேட்பீர்கள்,' என்று வித்யா தவறாகச் சொல்லிவிட்டான் என்று போர்யா நினைத்தார். முகாம்காரனை அவர் திருத்தினார், ஆனால் வித்யா விடாது வற்புறுத்தினான்.

''நீங்கள் பார்க்கவும் கேட்கவும் செய்வீர்கள். எனக்குக் கொஞ்சம் களிமண்ணும் பலகைத் துண்டும் தேவை.''

அன்றே வித்யா வெளிப்புறத்தில், ஒரு பிலைன் மரத்தின் நிழலில் களிமண்ணைப் பிசையத் தொடங்கினான். அப்ப மாவு போல அவன் களிமண்ணுடன் வேலை செய்து கொண்டிருப்பதைக் கவனித்த மற்ற சிறுவர்கள் கிண்டல் செய்யத் தொடங்கினார்கள். ''களிமண் பணியாரம் சுடப் போகிறான் வித்யா. பிறகு அவற்றைத் தின்பான்!''

பிரிவு முழுமையுமே அவனைச் சுற்றிச் சூழ்ந்து அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான் எனக் கேட்டது. வித்யா பதிலளித்தான்: ''பாடுவது பற்றிக் களிமண்ணுக்கு நான் கற்பித்துக் கொண்டிருக்கிறேன்.''

அவன் களிமண்ணைப் பிசைந்து பிறகு ஒரு பணியாரமாக்கினான். தட்டையான அடிபாகத்துடன் ஒரு மெல்லிய குழாய் அமைப்பதற்காகத் தனது விரலைச் சுற்றிலும் அதைச் சுருட்டினான். குழாய் அவனது விரலில் இருந்த போதே, அடிப்பகுதியிலும் பக்கவாட்டிலும் இரு சிறிய கீறுகள் வெட்டினான். பிறகு அதைத் தனது விரலை விட்டு எடுத்து மற்றொரு முனையை மூடினான். கீறலில் ஊத, களிமண் பாடத் தொடங்கியது.

ஒவ்வொருவரும் கத்தத் தொடங்கினர்:

''அதை எப்படிச் செய்வதென்று எனக்குக் காட்டு!'' ''எனக்கும்!''

''நல்லது,'' என்றான் வித்யா. ''ஆனால் எனக்கு உங்களால் என்ன கற்பிக்க முடியும்?''

''வரைய.''

''மரச் செதுக்கலை.''

''எப்படிப் புகைப்படங்கள் எடுப்பது.''

ஒவ்வொரு முகாம்காரனும் ஏதோ சிறப்பான திறமை பெற்றிருந்தான், அதை

மற்றவனுக்கு அவனால் கற்பிக்க முடியும்.

ஆர்தெக்கில் பல பொழுதுபோக்குக் குழுக்கள் இருந்தன, அவை எல்லாவற்றையும் எண்ணுவது என்பது சிரமம். ஓட்டுநருடைய கல்வி, விமான வடிவமைப்பு, தொழில் அமைப்பு, வானொலி, புகைப்படம், ராக்கெட் வடிவமைப்பு, திரைப்படம், கார் வடிவமைப்பு, பொம்மைகளும் விளையாட்டுகளும், இயற்கையும் கற்பனையாற்றலும், இளம் உயிரின ஆய்வாளர்கள், வரலாற்றுப் படிப்பு போன்றவை இதில் அடங்கும். ஆனால் எந்த ஒரு குழுவும் ஒரு முகாம்காரனுக்குப் பொருந்தவில்லை என்றால், மற்ற சிறார்கள் ஏதேனும் புதியதை அவனுக்குக் கற்பிக்க முடியும். ஆர்தெக் திறமை கள் உலகமெங்கும் பரவிக் கொண்டிருக்கின்றன.

## சாபா

ஆர்தெக்கிற்கு வரும் ஒவ்வொருவனும் தன்னுடன் எதையாவது எடுத்து வரு கிறான் — ஒரு பாடல், முகாம் அருங்காட்சியகத்திற்கான ஒரு பொருள், வீட்டில் செய்த ஏதேனும் ஓவியம் அல்லது பூவேலைப்பாட்டுப் பொருள்.

சோவியத் யூனியன் பல தேசிய இன மக்களைக் கொண்ட மிகப்பெரிய நாடு. ஒவ்வொரு தேசிய இனத் திற்கும் சொந்தமான மொழி, ஆடை, பழக்கங்கள், விளையாட்டுகள் இருக்கின்றன. சோவியத் யூனி யனின் பதினைந்து குடியரசுகளிலிருந்தும் குழந்தைகள் ஆர்தெக்கிற்கு வருகிறார்கள். தங்களுடைய தாய் மொழிகளில் பேசுவதுடன் அவர்கள் எல்லாரும் ருஷ்யனும் பேசுவதால் அங்கே பழகிக் கொள்ளவும் புதிய நண்பர்களைப் பெறவும் உதவுகிறது. தங்களுடைய நகரங்களைப் பற்றிச் சொல்லவும், தங் களுடைய தேசிய விளையாட்டுகளையும் நடனங்களையும் காட்டவும், தங்களுடைய தாய் மொழிகளில் நாடோடிப் பாடல்களைப் பாடவும் அவர்கள் எப்போதுமே ஆர்வமுடையவர்களாக இருக்கிறார்கள்.

''நீ என்ன கொண்டு வந்தாய்?'' என்று ஈர்மாவினுடைய குழுவைச் சேர்ந்த சிறார்கள் அவளிடம் கேட்டார்கள். அவள் எஸ்தோனியாவிலிருந்து வந்திருந்தாள்.

''ஒரு பசுவை,'' என்று பதிலளித்தாள்.

''பொம்மையா?'' எனக் கேட்டார்கள்.

''உண்மையான ஒன்று,'' என்றாள்.

''எங்கே அது?''

''இங்கே எனது தலையில்,'' ஈர்மா குறும்புத்தனமாகச் சிரித்து, தனது நெற்றியைத் தட்டினாள்.

அதன் பிறகு சீக்கிரத்திலேயே ஈர்மாவினுடைய குழு தேசிய விளையாட்டுப் போட்டி நடைபெறும் என்பதை அறிந்து கொண்டது. போட்டிக்கு யாரை அனுப்பு வது என்பதை விவாதிக்கக் குழுப் பிரதிநிதிகள் ஒன்று கூடினர்.

''என்னை அனுப்புங்கள்,'' என்றாள் ஈர்மா. ''நான் உங்களைக் கைவிட்டு விடமாட்டேன், சத்தியமாகச் சொல்கிறேன்.''

சத்தியம் செய்தால், அவள் முனைப்பாக இருக்க வேண்டும். குழுப் பிரதிநிதிகள் ஒப்புக்கொண்டனர்.

போட்டியில் ருஷ்யர்கள் முதலாவது சென்றார்கள். 'ஸ்வைகா' ஆடுவது எப்படி என்பதை மற்றவர்களுக்கு அவர்கள் காட்டினார்கள். முதலில் அவர்கள் ஓர் உலோக வளையத்தைத் தரையில் வைத்தார்கள், பிறகு ஒரு முனையில் உருண்டைகளுடன் கூடிய கூர்மையான கம்பிகளை வளையத்துக்குள் வீச முயன்றார்கள்.



அடுத்து உக்ரேனியர்கள் 'ஷ்காந் தூபிக்கி' எனப்பட்ட குச்சிகளை எடுத்து வந்தார்கள். விளையாட்டின் நோக்கம் குச்சிகளை எறிவது, ஆகவே அவை காற்றில் ஒரு சக்கரம் போலச் சுழலும்.

'நீண்ட கழுதை' எனப்பொருள் படும் 'லூங்-மேகார்' என்ற விளையாட்டை மல்தாவியர்கள் காட்டினார்கள். மற்றவருடைய 'கழுதை முதுகின்' மீது அவர்கள் சவாரி செய்தார்கள்.

உஸ்பெக்கியர்கள் ஒற்றைக் கால் ஓட்டத்தைக் காட்டினார்கள். தரையைத் தொடாதவாறு மற்றொரு கால் கட்டப்பட்டிருந்தது. இசை இசைத்த போது ஒரு வர்ணக் கைக்குட்டையைச் சுற்றி கிர்கீஸியர்கள் நொண்டியடித்துக் கொண்டு ஓடினார்கள். இசை நின்ற போது, கைக்குட்டையை முதலாவதாக அடைய முந்தியடித்துச் சென்றார்கள்.

போட்டி நீதிபதிகளின் தலைவர், ''எஸ்தோனிய!'' என அறிவிக்கவும், ஈர்மா முன்னோக்கிடி சென்றாள்.

ஒரு துண்டுப் பலகையும் கொஞ்சம் சாக்கட்டிகளும் கேட்டாள். பிறகு பலகையை சைபிரஸ் மரத்தின் மீது சாய்த்துக் கொண்டு சாக்கட்டியால் ஒரு பசு வரையத் தொடங்கினாள்.

சிறார்கள் சிரித்தார்கள். பசுவுக்கு வாலில்லை.

''வாலை வரை!'' ''வாலை நீ மறந்துவிட்டாய்!'' அவர்கள் சத்தம் போட்டார்கள்.

ஆனால் ஈர்மா தனது தலையை அசைத்தாள்.

''பசுவுக்கு ஏற்கெனவே வால் இருக்கிறது,'' என்றாள். ''ஆனால்

அது இங்கே.'' தனது பையைவிட்டு ஒரு துணி வாலை வெளியே இழுத்தாள். மற்றொரு பையினின்றும் கறுப்புத் தலைக்குட்டை ஒன்றை எடுத்து, எஸ்தோனிய நாடோடி ஆட்டமான 'சாபா' ஆட விரும்பியவர்கள் யாரேனும் இருந்தனரா எனக் கேட்டாள்.



அநேகமாக எல்லாருமே ஈர்மா விடம் ஓடினார்கள், ஆனால் அவள் ஒரே ஓர் ஆட்டக்காரனை மட்டும் தேர்ந்தெடுத்து விட்டு, மற்றவர்களுக்கு அவர்களுடைய முறை வரும் வரை வரிசையில் காத்திருக்கும்படி சொன்னாள். கறுப்புத் தலைக்குட்டையைப் பையனுடைய கண்களின் மீது கட்டி, உச்சியில் ஒரு குமிழாணியுடன் வாலை அவனிடம் கொடுத்து, மூன்று முறை அவனைத் திருப்பி, பசுவின் மீது வாலைக் குத்துமாறு அவனிடம் சொன்னாள்.



ஈர்மா அறிவுறுத்தியவாறு துணிச்சலோடு அவன் செய்தான். பசுவரை சென்று பசுவினுடைய கொம்புகள் இருக்க வேண்டிய இடத்தில் வாலைக் குத்தினான்.

எல்லாரும் வாய் விட்டுச் சிரித்தார்கள். தலைக்குட்டையை அவிழ்த்த போது, தான் என்ன செய்திருந்தோம் என்பதைப் பார்த்த அப்பையனும் சிரித்தான். வரிசையில் இருந்த இரண்டாவது ஆள் முன்னுக்கு வர 'சாபா' ஆட்டம் தொடர்ந்தது.

போட்டியில் வெற்றி பெற்று ஈர்மா தனது குழுவுக்குத் திரும்பினாள்.



## 'வாலி'

கால்பந்தாட்டக் களத்தைச் சுற்றிலும் பந்து வெறி கொண்டது போலப் பறந்து கொண்டிருந்தது. சற்று தொலைவு தள்ளி, சிறுவன் யானிஸ் ஆட்டக்காரர்களுக்குத் தனது முதுகைக் காட்டி நின்று, தனது கன்னத்தைப் பிடித்துக் கொண்டு அழுது கொண்டிருந்தான்.

கடற்கரைக்குச் சென்று கொண்டிருந்த வித்யா புரோகரவ், பின்லாந்துச் சிறுவன் அழுது கொண்டிருப்பதைப் பார்த்ததும் நின்றான்.

''என்ன விஷயம்?'' எனக் கேட்டான்.

யானிஸ் பதிலளித்தான், ஆனால் வித்யா புரிந்து கொள்ள முடியவில்லை. அச்சிறுவன் அந்நிய நாட்டுப் பையன், ருஷ்யன் பேசமாட்டான் எனக் கருதினான். ஆனால் அவன் அழுது கொண்டிருப்பதனால் அவனுடைய உணர்வுகளை யாரேனும் புண்படுத்தியிருக்க வேண்டும் என நினைத்தான். குற்றவாளியைத் தேடிச் சுற்றிலும் பார்த்தான், ஆனால் அண்மையில் யாருமே இல்லை. கீழே குனிந்து, தரையில் ஒரு கேள்விக்குறி வரைந்தான். கன்னத்தில் தானாகவே கையைக் குத்திக் கொண்டு கேட்டான்:

''யார்?''

சிறுவன் வேதனைப் புன்னகை செய்து முணுமுணுத்தான்: ''வா-ா-லி.''

'வாலி'யா? அந்தப் பெயரை வித்யா முன்னர் கேள்விப்பட்டதே இல்லை, ஆனால் அதுவன்று முக்கியம். குற்றவாளி 'வாலி' தான் செய்ததற்குப் பதில் பெற்றாக வேண்டும். ஆர்தெக்கில் சண்டையிடவும், அந்நிய விருந்தினர்களைப் புண்படுத்தவும் வேண்டாம் என வித்யா அவனுக்குக் கற்பிப்பான். அவனைக் குழுப் பிரதிநிதிகளுக்கு முன்னால் கொண்டு போய் நிறுத்துவான்.



முகஞ்சுளித்து அழுகின்ற பையனை உற்று நோக்கினான்.

''எங்கே அந்த 'வாலி' என்பவன்?''

''இங்கே!'' என்று அந்த பின்லாந்துச் சிறுவன் தனது வீங்கிய கன்னத்தைச் சுட்டிக் காட்டினான்.

வித்யா வாய்விட்டுச் சிரிக்கவிருந்தான், ஆனால் நேரத்தில் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

''உன் பல்லா?'' பரிவோடு கேட்டான்.

''பல் ஆம்,'' புலம்பினான் யானிஸ்.

''கேள், உன் பல் வலித்தால் ஒரு பல்மருத்துவரை நீ பார்க்க வேண்டும்,'' வித்யா பொறுமையின்றி பேசினான்.

'பல்மருத்துவர்' என்ற வார்த்தையைக் கேட்டவுடனேயே யானிஸ் பின்வாங்கினான். ''அவன் பயப்படுகிறான்,'' என வித்யா எண்ணிக் கொண்டான். கால்பந்தாட்டக்காரர்களை சீட்டியடித்து இங்கே அழைத்தான்.

''இவனுக்குப் பல்வலி இருக்கிறது. ஆனால்

*பல்மருத்துவரிடம் போகப் பயப்படுகிறான். நாம் என்ன செய்வது?''*

*அவர்கள் சற்று நேரம் சிந்தித்தார்கள், பிறகு அவர்களில் இருவர் திடீரென்று தங்களது கைகளால் கன்னங்களை மூடிக் கொண்டு புலம்பத் தொடங்கினார்கள்:*

*''ஓ, என் பல்லே! என் பல்லே!''*

*பின்லாந்துச் சிறுவன் நம்பிக்கையற்று அவர்களைக் கூர்ந்து நோக்கினான், ஆனால் எஞ்சிய பையன்கள் நேரத்தை வீணாக்கவில்லை. அந்த இருவரையும் தோள்களைப் பற்றிப் பிடித்து, யானிசையும் அழைத்துக் கொண்டு பல்மருத்துவருடைய அலுவலகத்திற்கு விரைந்தார்கள். பல்வலியோடு இருக்கக் கூடிய மற்ற இருவரும் எந்த எதிர்ப்பும் காட்டாததைக் கண்ட யானிஸ் சிநேகமான பலாத்காரத்தில் கீழ்ப்பணிந்தான்.*

*கால்பந்தாட்டக் குழுவினர் அனைவருக்குமே திடீரென்று பல்வலி வந்து விட்டதோ எனப் பல்மருத்துவள் சிந்தித்து ஆச்சரியமடைந்தாள். ஆனால் என்ன நடந்தது என்பதை வித்யா அவளிடம் கிசுகிசுக்க, யானிசைப் பார்த்து அவள் முறுவலித்தாள்.*

*''விருந்தினர்கள் முதலில். தயவுசெய்து நாற்காலியில் உட்காரு,'' என்றாள் அன்புடன்.*

*தன்னால் முடிந்த எல்லாவற்றையும் செய்துவிட்டதாகத் தீர்மானித்த வித்யா நீச்சலடிக்கப் புறப்பட்டான். கடற்கரையிலிருந்து அவன் திரும்பி வந்து கொண்டிருந்த போது, மருத்துவமனை முற்றத்தில் யானிசுடைய சட்டையைப் பிடித்தவாறு பல்மருத்துவள் நின்று கொண்டிருப்பதைக் கவனித்தான்.*

*''அவன் அதை மறந்து போயிருக்க வேண்டும்,'' என ஊகித்தான். அதை எடுத்துக் கொண்டு பின்லாந்துச் சிறுவனைத் தேடிப் புறப்பட்டான். அவனைக் கண்டுபிடிப்பதில் சிரமம் ஏதும் இருக்கவில்லை. பந்தை உதைந்து கொண்டு யானிஸ் களத்தில் இருந்தான். வித்யா அவனை அழைத்துச் சட்டையை நீட்டினான், ஆனால் யானிஸ் அதைப் பார்க்கக் கூட இல்லை. பையன் தனது காற்சட்டைப் பைக்குள்ளாக ஏதோ தேடித் தேடி, கையை விட்டு எடுத்து, வெறுங்கையைக் காட்டினான்.*

*''பணம் இல்லே,'' என்றான்.*

*''எதற்கு உனக்குப் பணம் தேவை?'' வித்யா வியப்போடு கேட்டான்.*

*பின்லாந்துச் சிறுவன் முறுவலித்து, தனது வற்றிப்போன கன்னத்தைத் தடவினான்.*

*''பல் வலி இல்லே. பணம் இல்லே. பல் டாக்டருக்கு,'' என்ற அவன், சட்டையைச் சுட்டிக்காட்டினான். பிறகு கவலையோடு, ''கொஞ்சமா?'' எனக் கேட்டான்.*

*வித்யா புரிந்து கொண்டான். பின்லாந்துச் சிறுவன் இன்னமும் சோவியத் முறைக்குப் பழகிக் கொள்ளவில்லை. அவன் வசித்த இடத்தில் எல்லாவற்றுக்கும், மருத்துவ உதவி உள்பட, பணம் செலுத்த வேண்டும்.*

*''நீ எதுவும் கொடுக்க வேண்டியதில்லை,'' என்று யானிசிடம் கூறி அவனுடைய சட்டையை ஒப்படைத்தான். ''சோவியத் யூனியனில் மருத்துவம் இலவசம்.''*

*யானிஸ் சற்று நேரம் அங்கேயே நின்று வித்யா சொன்னது பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தான். பிறகு தனது சட்டையை அணிந்து கொண்டு, கால்பந்தாட்டத்தில் கலந்து கொள்ளத் திரும்ப விரைந்தான்.*

## மற்போர்

முதலாவது குழுவில் போதுமானதற்கும் மேலாகச் சிறுமிகள் இருந்தார்கள். உண்மையில், பையன்களைப் போல ஒன்றரை மடங்கு அதிகமாகும். அதன் காரண மாகத்தான் இன்னொரு பெண்குழந்தை வந்த போது அவர்கள் உண்மையில் மகிழ்ச்சி யடையவில்லை. அவள் பிரான்சைச் சேர்ந்தவள், சுசான்னா என்பது பெயர்.

பொன்நிற முடிகொண்ட அச்சிறுமியை ஈகரும் கோஸ்த்யாவும் உடனடியாக விரும்பிவிட்டார்கள். தங்களுடைய துணிவு, வலிமை, இவற்றைக் காட்டுவதற்கு ஒவ்வொரு வாய்ப்பையும் பயன்படுத்திக் கொண்டார்கள்.

அங்கே சில நாள்கள் இருந்த பிறகு சுசான்னா தனது ருஷ்ய சிநேகிதிகளிடம் புகார் செய்தாள். அவளோடு நட்புக் கொள்ள ஈகரும் கோஸ்த்யாவும் விரும்பினார் கள், ஆனால் தனக்கோ என்ன செய்வதென்று தெரியவில்லை எனச் சொன்னாள்.

''அவர்களை நண்பர்களாக்கிக் கொள்ள நீ விரும்பவில்லையா?'' என மற்றவர்கள் கேட்டார்கள்.

''நான் விரும்பத்தான் செய்கிறேன்,'' என சுசான்னா பதிலளித்தாள்.

''சரி, என்ன பிரச்சினை?''

''அவர்கள் ஒன்று சேர்ந்து நண்பர்களாக விரும்பவில்லை. ஒவ்வொருவனும் தன்னோடு மட்டுமே நான் நண்பனாக வேண்டும் என விரும்புகிறான்.''

சிறுமிகள் சிரித்தார்கள். ''நீ என்ன செய்யப் போகிறாய்?''

''எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது,'' என்றாள் சுசான்னா. ''நாம் ஒரு மற்போர் வைக்கலாம்.''

ருஷ்யச் சிறுமிகள் அதிர்ச்சியடைந்தார்கள். மற்போரா? முட்டிகளாலா?

அவர்களில் ஒருத்தி சுசான்னாவிடம் சொன்னாள்: ''பிரச்சினையைத் தீர்ப் பதற்கு முட்டிச் சண்டை நல்ல வழியில்லை.''

''முட்டிச் சண்டையா? ஓ, இல்லை! நான் வேறொரு வகையான மற்போரைக் குறிப்பிட்டேன். செஸ் மற்போர்,'' என்றாள் சுசான்னா.

''செஸ் மற்போரா?'' என்று மற்றவர்கள் வியப்புடன் கேட்டனர்.

''சரிதான். செஸ் ஆட்டத்தில் எவன் என்னை வெல்கிறானோ அவனை நான் நண்பனாக்கிக் கொள்வேன்,'' என்று கூறி தந்திரமாக முறுவலித்தாள்.

சிறுமிகள் ஒருத்தியையொருத்தி பார்த்துக் கொண்டு சோகத்துடன் சுசான்னாவை நோக்கினர். ஈகரும் கோஸ்த்யாவும் அவர்களுடைய அணியிலேயே செஸ் ஆட்டத்தில் சிறந்தவர்கள். அவர்கள் சுசான்னாவை எச்சரிப்பது நல்லது.

''கவலைப்படாதீர்கள்,'' என்றாள் அவள். ''நாளை பார்க்கலாம்.''

தாங்கள் 'மற்போருக்கு'ச் சவால் விடப்பட்டோம் என்பதை அறிந்த போது அந்தப் பையன்கள் கிளர்ச்சியுற்றார்கள். சுசான்னாவை ஒரே மூச்சில் தாங்கள் வெற்றி பெற முடியும் என்பதில் அவர்கள் இருவரும் உறுதியாக இருந்தார்கள்.

யார் முதலில் ஆடுவது என்பதைப் பார்க்க பூவாதலையா போட, ஈகர் வென் றான். செஸ் பலகையின் முன்னர் அவன் உட்கார்ந்தான், இதை அவன் புரிந்து கொள்ளும் முன்னே அவனுடைய 'அரசன்' கட்டப்பட்டிருப்பதை அறிந்தான்.

''நீ தோற்றுப் போனாய், நீ தோற்றுப் போனாய்,'' என சிறுமி-நீதிபதிகள் கத்தினார்கள்.

ஈகருக்கு ஏற்பட்ட கதியே கோஸ்தியாவுக்கும் ஏற்பட்டது.

பிறகு சுசான்னா வென்றவளுடைய விருப்பத்தை அறிவித்தாள். தனது கையை நீட்டி இரு பையன்களுடனும் நண்பர்களாக இருக்கப் போவதாகச் சொன்னாள். வேறு யாரேனும் விரும்பினால் நண்பர்களாக்கிக்கொள்ள அவள் தயாராக இருந்தாள்.

ஈகரும் கோஸ்த்யாவும் மறுக்கவில்லை. போட்டி நியாயமானதாக இருந்தது, சுசான்னா நேர்மையாக வென்றாள், ஆனால் உள்ளுக்குள்ளாக இருவரும் தோல்வி யடைந்ததற்காக நிலைகுலைந்து போனார்கள். பாரிசின் நகர்ப்புறத்தில் ஜுனியர் செஸ் சாம்பியன் சுசான்னா என்பது அவர்களுக்குத் தெரியாது.

## கண்ணாடி உறைகள்

ருஷ்யச் சிறுமியாகிய ஓல்யா கடிதத்தைத் தொடங்கினாள்.

''இது ஆர்தெக்கிலிருந்து **சமாதான நாளில்** அனுப்பப்படுகிறது. பல்வேறு நாடு களினின்றும் வந்த குழந்தைகள் இதை எழுதினார்கள்.''

பெலோருஷ்யச் சிறுவன் அந்திரேய் தொடர்ந்தான்:

''எங்களுடைய விருப்பமான பாடலில் அத்தகு வார்த்தைகள் இருக்கின்றன: 'சூரிய ஒளி எப்போதுமே இருக்கட்டும், நீல வானங்கள் எப்போதுமே இருக்கட்டும், அம்மா எப்போதுமே இருக்கட்டும், நானும் எப்போதுமே இருக்க வேண்டும்.' ''

உக்ரேனியச் சிறுமி அக்ஸானா எழுதினாள்:

''உலகத்தில் எல்லாச் சிறுவர்களையும் நண்பர்களாக்கிக் கொள்ள நாங்கள் விரும்புகிறோம்.''

அமெரிக்கச் சிறுவன் ஏர்வின் இவ்வாறு தொடர்ந்தான்:

''பெரியவர்களே! இன்றும் நாளையும் குழந்தைகளுக்கு மகிழ்ச்சிமிக்க நாள்களாக இருக்க உங்களால் முடிந்த எல்லாவற்றையும் செய்யுங்கள்! போரே இல்லாது இருக்க உங்களால் முடிந்த எல்லாவற்றையும் செய்யுங்கள்!''

பின்லாந்தைச் சேர்ந்த ரேய்மோ எழுதினான்:

''ஆர்தெக்கில் நாங்கள் நட்புக்கொள்கிற அளவுக்கு உலகத்திலுள்ள எல்லாக் குழந் தைகளும் நட்புக்கொள்ள வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.''

கடைசி வரியைப் பற்றி அவர்கள் ஒன்று சேர்ந்து சிந்தித்தார்கள்:

''ஒவ்வொரு காலையும் நமது கோளம் விழித்தெழும் போது சொல்ல வேண்டும்: 'ஹலோ சூரியனே! ஹலோ நண்பர்களே! ஹலோ சமாதானமே!' ''

அன்றைய நாளில் ஏராளமான கடிதங்கள் எழுதப்பட்டன. அவை எல்லாமே போத்தல்களில் வைக்கப்பட்டு அரக்கு வைத்து மூடப்பட்டன. அந்தி சாயும் வேளை யில், பல்வேறு வண்ண டைகள் அணிந்த சிறுவர்களும் சிறுமிகளும் ஒரு பெரிய படகில் துறையைவிட்டுப் புறப்பட்டார்கள். கடற்கரை நெடுகிலும், தீவட்டி ஊர்வலம் ஒன்று சென்றது, நட்சத்திரங்கள் வானில் மின்னின, அமைதியான பெருங்கடலில் பெரிய படகு சென்றது.

''நாங்கள் சர்வதேச நீரில் இருக்கிறோம்!'' என்று ஒரு குரல் கத்தியது, கண்ணாடி 'உறைகளில்' இருந்த கடிதங்கள் நீரில் வீசியெறியப்பட்டன. அவை எல்லாமே ஒரே







ஒரு முகவரியையே கொண்டிருந்தன: 'உலக மக்களுக்கு'.

விழாக் கொடி ஏற்றப்பட்டது. ஒரு கிழமை முழுக்க அந்தக் கொடி ஆர்தெக்கிற்கு மேலாகப் படபடத்துப் பறக்கும். அக்கிழமை முழுக்க சோவியத் யூனியனிலிருந்தும் மற்ற நாடுகளிலிருந்தும் வந்த சிறுவர்களும் சிறுமிகளும் பாட்டு, நடனம், ஒப்பித்தல், ஓவியம், மற்றும் கவிதைப் போட்டி இவற்றில் பங்கு பெறுவார்கள்.

## கண்ணீர்த் துளிகள்

ஆர்தெக் கொண்டாட்டங்களை விரும்புகிறது. அயல் நாட்டுக் குழந்தைகள் முகாமில் இருந்த போது, சர்வதேசத் தொடரின் போது **சமாதானம் மற்றும் ஒருமைப்பாட்டு நாள்** வந்தது. அன்றைய தினம் **நெகிடிச் சதுக்கத்தில்** பல்வேறு மொழிகளில் பாடல்கள் பாடப்பட்டன, நினைவுப் பொருள்களின் பரிமாற்றம் நடைபெற்றது, இளம் நடனக் காரர்கள், இசை அமைப்பாளர்கள், சிற்பிகள், கவிஞர்கள் மற்றும் தலைஞர்கள் தங்களுடைய திறமைகளைக் காட்டினார்கள். மாலையில் தீவட்டி ஊர்வலமும் போத்தல்களில் அடைக்கப் பட்ட கடிதங்களை 'அஞ்சல்' செய்தலும் இருந்தன.

பெலோருஷ்யாவைச் சேர்ந்த நீனா புர்லகோவாவால் வரைய முடியவில்லை. வீட்டில் அது பற்றி அவள் அதிகம் கவலைப்பட்டதில்லை — அவள் ஓர் ஓவியராக இருக்க முடியாது, எனினும் அவளால் நன்றாகப் பாட முடியும். ஆனால் ஆர்தெக்கில், சாக்கட்டியால் வரைய முடியவில்லை என்பதற்காக நீனா வருத்தப்பட்டாள். அது சாக் கட்டிதானே! அதாவது, ஆர்தெக்கிற்கு வந்த போது நீனா, **சமாதானம் மற்றும் ஒருமைப்பாட்டு நாளில்** கருங்காரையில் வரையும் ஓவியப் போட்டி இருக்கும் என்பதைப் பற்றி அறிந்து கொண்டாள். அவள் ஓவியராக இல்லாத போதும் அதில் பங்கு கொள்ள அவள் தீர்மானித்தாள்.

பள்ளியை அடுத்த சதுக்கத்தில் போட்டி நடைபெற்றது.

நீண்ட நேரத்திற்கு நீனாவால் தொடங்க முடியவில்லை. அவள் சுற்றிலும் வந்து, மற்றவர்கள் அந்தளவு முயற்சியின்றி வரைவதைக் கண்டு பொறாமைப்பட்டாள். வர்ணமோ, பென்சில்களோ இல்லாமல் சாதாரணமான வர்ணச் சாக்கட்டியைக் கொண்டு அருமையான படங்களை அவர்கள் வரைந்து கொண்டிருந்தார்கள். தீர்க்க ரேகைகளுடனும் அட்சரேகைகளுடனும் கூடிய பிரகாசமான நீல பூமி, ஒரு வெண் புறா, கருநீல விண்வெளிக் கப்பல்கள், உயரமான சிவப்புப் புகைப்போக்கி கொண்ட தொழிற்சாலை, பொன்மஞ்சள் கோதுமை வயல் ஆகியவற்றைக் காணலாம். ஆனால் என்ன வர்ணத்தை தான் பயன்படுத்த வேண்டும் என்பதை இன்னமும் நீனாவால் முடிவு செய்ய முடியவில்லை.

முன்னதாக அன்று காலையில் நடந்த கூட்டத்தில் சில சிலி நாட்டு விருந்தினர்கள் பேசினார்கள். பாசிஸ ஜூந்தாவின் ஆட்சியின் போது சிலி நாட்டு உழைப்பாளர்களின் வாழ்க்கை எவ்வளவு பயங்கரமாகவும் துயரமாகவும் இருந்தது என்பது பற்றி அவர்கள் குழந்தைகளுக்குச் சொன்னார்கள். அவர்களுடைய கதையை நீனா நினைத்துப் பார்த்து, தான் என்ன வரைய வேண்டும் என்பதைத் தீர்மானித்தாள். தனது சாக்கட்டிப் பெட்டியை வெளியே எடுத்தாள், ஆனால் அவளுக்குத் தேவைப்பட்ட வர்ணங்கள் இல்லை. திரும்பவும் முகாமுக்கு ஓடினாள், **நெகிடிச் சதுக்கத்தில்** ஒரு கரிக்கட்டையைக் கண்டெடுத்து, போட்டிக்குத் திரும்பிவந்தாள். ஆரம்பிப்பதற்கு நேரம் வந்து விட்டது. மற்றவர்களில் சிலர் ஏற்கெனவே முடித்து விட்டிருந்தனர்.

நீனா முழங்காலிட்டு அமர்ந்து சிறைக் கம்பியை வரைந்தாள் — நான்கு படுக்கையான கருப்புக் கோடுகள், நான்கு செங்குத்தான கருப்புக் கோடுகள். பிறகு ஒரு வெள்ளைச் சாக்கட்டியை எடுத்துக் கம்பிகளுக்குக் கிடையே மூன்று கண்ணீர்த் துளிகளை வரைந்தாள். தனது ஓவியத்திற்கு மேலாக ‘சிலி’ என்ற எழுத்தை எழுதினாள்.

அவள் எழுந்து நின்று, மற்றவர்களின் ஓவியங்களைப் பார்க்க மீண்டும் நடந்தாள். தன்னுடைய ஓவியத்திற்கு அவள் திரும்பிவந்த போது அதைச் சுற்றிலும் ஒரு பெருங் கூட்டம் சேர்ந்திருந்தது. அதில் இந்தியர்கள், ஆப்பிரிக்கர்கள், ஜப்பானியர்கள், இத்தாலியர்கள், பிரெஞ்சுக்காரர்கள் மற்றும் சிலி நாட்டவர்கள் இருந்தனர். அவர்களுடைய முகங்கள் கடுகடுப்பாகவும் துயரமாகவும் இருந்தன.

## ஒரு ருஷ்ய தேவதைக் கதை

சிறுவன் டாம் இன்னமும் ஆப்பிரிக்காவில் இருந்து, ருஷ்யாவுக்குப் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்த போது, பெரும் ருஷ்யக் கவிஞர் பூஷ்கின் எழுதிய தேவதைக் கதைகளைப் படித்தான். பூஷ்கினுடைய முன்னோர் ஒருவர் ஆப்பிரிக்காவைச் சேர்ந்தவர் என்பது குறித்து டாம் மிகவும் பெருமைப்பட்டான்.

அவனுக்கு விருப்பமான கதை **ஜார் சல்தான்,** தான் படித்த அந்த அற்புதமான கதாபாத்திரங்கள் அனைத்தும் உண்மையாகவே வசித்தவர்கள் என்பது குறித்து ரகசியமாக ஆசைப்பட்டான். ஆனால் ஆர்தெக்கில், **நெப்டியூன் விழாவின்** போது அவனுக்கு விருப்பமான தேவதைக் கதைக் கதாநாயர்கள் சிலரை அவன் பார்க்கக் கூடும் என்று சொன்னதை அவன் நம்பவில்லை.

*பூஷ்கின் எழுதிய ஜார் சல்தான் என்ற மந்திர தேவதைக் கதையில் விசித்திரமான நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. ஓர் அழகிய அன்னம் அருமையான இளவரசியாக மாறுகிறது, ஆளற்ற தீவில் ஓர் இரவில் திடீரென்று ஒரு நகரம் தோன்றுகிறது, அந்த நகரத்தைக் காப்பாற்றுவதற்காக வலிமைமிக்க செர்னமோரும், அவருடைய வீரர்களின் முப்பத்து மூன்று பரிவாரங்களும் கடலின் ஆழத்தை விட்டு ஒவ்வொரு நாளும் வெளியேறுகின்றனர்.*

விழா நாளன்று கடற்கரை கொடிகளாலும் மலர்களாலும் அலங்கரிக்கப்பட்டது. பல்வேறு மொழிப் பாடல்களை அங்கு கேட்க முடியும்.

இதோ, படகு, பெரிய படகு, துரிதப் படகு, இவற்றின் கூட்டம் தோன்றியது. அவை கரை சேர, பிரகாசமாக உடையணிந்த கடற்கொள்ளையர்கள் மற்றும் கடற் கன்னிகளின் கூட்டம் கரையேறியது. இசைவாணர்கள் உல்லாசமான இசையை வாசித்தார்கள். கடற்கன்னிகளும், கடற்கொள்ளையர்களும் நடனமாடத் தொடங் கினர். திடீரென்று எல்லாம் அமைதியாகிப் போயின. ஒரே ஒலி கரை மீது சிதறிய அலைகளின் ஒலிதான். கடற்கன்னிகளும் கடற்கொள்ளையர்களும் அசையாது அப் படியே நின்றனர். கடலை விட்டு அவர்கள் கண்களைக் கூட எடுக்கவில்லை. டாம் சில்லிட்டுப் போனான். அவன் கண்டதெல்லாம் அந்தளவு நம்ப முடியாததாக இருந் தது, அவனது சுவாசமே அநேகமாக நின்றுவிட்டது. கடல் பிரிவது போலக் காணப் பட்டது, வீரர்களும் செர்னமோரும் நீரை விட்டு மெதுவாக நடந்து கரையேறினார் கள்.

நம்பிக்கை கொள்வதற்காக டாம் வீரர்களை விரைவாக எண்ணினான். அவர் கள் சரியாக முப்பத்து மூன்று பேர் இருந்தனர்! அது பற்றிச் சந்தேகமே இல்லை. நிச்சயமாக அவர்கள் பூஷ்கினுடைய தேவதைக் கதைக் கதாநாயர்கள் தான்! அவர் கள் தலைக்கவசங்களும், உலோக வளையங்களால் பின்னப்பட்ட போர்க் கவசமும் அணிந்து, ஈட்டிகளைத் தாங்கிக் கொண்டிருந்தார்கள். மிகவும் கிளர்ச்சியுற்ற டாம் அவர்களுடைய முதுகுகளில் நீர் மூழ்குபவர்கள் பயன்படுத்தும் சிலிண்டர் களைப் பார்க்கவில்லை.

வீரர்கள் கடற்கரைநெடுகிலும் ஒரே வரிசையாக நின்று, கடலை நோக்கி முகத் தைத் திருப்பினார்கள். தங்களுடைய ஈட்டிகளை உயர்த்தி அவற்றைக் குலுக்கி கடல்தெய்வம் நெப்டியூனின் வருகையை வாழ்த்தினார்கள். அவர் அச்சுறுத்தக் கூடிய தோற்றம் கொண்டவர், ஆனால் அதே நேரத்தில் இயல்புகடந்து அன்பாக இருந்தார். எந்தவகையிலும், அவரைப் பார்த்து யாரும் பயப்படவில்லை. அவரிடத்தில் முகாம்கா ரர்கள் கொடுத்திருந்த புகார்களின் சுருளைச் சோதித்துப் பார்த்தார், பிறகு குற்ற வாளிகளைத் தண்டிக்க, அதாவது தனது கருங்கடல் ஆட்சி எல்லையில் மூழ்கடிக்க உத்தரவிட்டார். அவரது வேலையாட்களின் உதவியோடு அவருடைய கட்டளை நிறைவேற்றப்பட்டது, ஆர்தெக் தலைவர்கள் நீருக்குள்ளாக வீசி எறியப்பட்டார் கள்.

''இதற்கு மேல் ஏதேனும் புகார்கள் இருக்கின்றனவா?'' என நெப்டியூன் அதிரிட் டார்.

''ஆமாம்!'' டாம் கத்தி, கடல்தெய்வம் வரை சென்றான்.

''உன்னுடைய புகார் என்ன?''

டாம் அரைகுறை ருஷ்யனில் விளக்க முற்பட்டான். நெப்டியூனையும் முப்பத்து மூன்று வீரர்களையும் தான் நம்பவில்லையாதலால் புகார் செய்வதாகக் கூறினான்.





ஆர்தெக்கில் நடைபெறும் கொண்டாட்டங்கள், விளையாட்டுகள் மற்றும் பிற நடவடிக்கைகள் எப்போதுமே கூட்டம் நிறைந்து, பிரகாசமாகவும், ஆர்வமிக்கதாகவும் விளங்குகின்றன.







டாமின் தேவதைக் கதைகளில் நம்பிக்கையின்மையைக் குணப்படுத்தத் தனது ஆட்களுக்கு நெப்டியூன் கட்டளையிட்டார். மகிழ்ச்சிமிக்கக் கத்தல்களோடு அவர்கள் ஆப்பிரிக்கச் சிறுவனை நீரில் முக்கி, பிறகு கரைக்குத் தூக்கிவந்தார்கள்.

டாமினுடைய முகத்தில் பெரும் புன்னகை பளிச்சிட்டது. ''ஆர்தெக் மண்ணில்,'' அவன் சிந்தித்தான், ''தேவதைக் கதைகள் கூட உண்மையாகின்றன.''

## காய்ந்து போன ஜெல்லிமீன்கள்

பள்ளியிலுள்ள சிறுவர்கள் ஆர்தெக்கிற்குச் செல்லப் போகிறவனைத் திரும்பும் போது ஏதாவது கொண்டுவரச் சொல்வது வழக்கம். அயற்பண்புடைய தாவரத் தொகுப்பு, அல்லது சிப்பிகள் அல்லது கூழாங்கற்கள் இவற்றைச் சேகரிக்குமாறு சொல்வார்கள். ஆகவே, முகாம்காரர்கள் வழக்கமான முகாம் 'தொழில்களோடு' — வானொலி இயக்குநன், நெடுவழி நடைப்பயண நிபுணன், மருத்துவ உதவியாளன், போட்டி நடுவன், டேபிள் டென்னிஸ் பயிற்சியாளன் — மேலும் ஒன்றையும் — சேகரிப்பாளன் — கொண்டிருக்கிறார்கள்.

வட்ட முகமும், களையும் பொருந்திய மீத்யா அர்ஹீப்பவ் ஏதாவது வழமையற்றதைத் திரும்பும் போது கொண்டு வருவதாக உறுதி சொன்னான். ஆனால் அந்த ஏதாவது என்னவாக இருக்கும் என்பதை அவன் குறிப்பிடவில்லை. ஏனென்றால் அவனுக்கே அது தெரியாது.

ஒரு நாள், மீத்யா அலைதாங்கியில் நடந்து சென்று நீருக்குள்ளாக உற்றுப் பார்த்தான். கடல் தெளிவாக இருந்தது. சின்னஞ்சிறு மீன்கள் பாய்ந்து திரிவதையும், மணற்பாங்கான அடிப்பரப்பில் சிப்பிகள் மினுமினுப்பதையும் ஜெல்லிமீன்கள் மிதப்பதையும் அவன் காண முடிந்தது. அந்த ஜெல்லிமீன்கள்தான் மீத்யாவுக்கு ஒரு யோசனையை ஏற்படுத்தின.

அவன் கடற்கரைக்கு விரைந்து ஓடி, ஒரு வாளியையும், பள்ளி சேகரிப்புக்காக வண்ணத்துப் பூச்சிகளைப் பிடிக்கப் பயன்படுத்தப்பட்ட ஒரு வலையையும் எடுத்து வந்து ஜெல்லிமீன்களைப் பிடிக்கத் தொடங்கினான். பிறகு பிடித்த ஜெல்லிமீன்களைக் கடற்கரைக்குத் தூக்கி வந்து, ஒரு செய்தித்தாளில் அவற்றைப் பரத்திப் போட்டு, ஒதுங்குப்புறமான ஓரிடத்தில் காய்வதற்காக வைத்தான். வெப்பமான சூரிய வெயிலில் அவை எரிந்து போய்விடக் கூடாது என்பதற்காக ஒரு பைன்மரக் கொப்பால் அவற்றை மூடி வைத்தான்.

மீத்யா மகிழ்ச்சியின் உச்சத்தில் இருந்தான். அப்படித் தான்! காய்ந்து போன ஜெல்லிமீன்களையே வீட்டுக்குக் கொண்டு வருகிறான்! மற்ற ஆர்தெக் முகாம்காரர்கள் இதைக் கண்டுபிடிக்கும் போது பொறாமைப் படுவார்கள். ''பள்ளிக்கு நீ திரும்ப என்ன எடுத்துப் போகிறாய்?'' புறப்படுவதற்குச் சற்று முன்னதாக அவர்கள் கேட்பார்கள், அவனும் பதிலளிப்பான், ''காய்ந்து போன ஜெல்லிமீன்கள்.''

மறுநாள் மீத்யா தான் திரும்பும் போது ஏதோ மிகவும் வழமையற்றதை எடுத்துக் கொண்டு போவதாகப் பெருமையடித்துக் கொண்டான்.

''என்ன அது? நீ வீட்டுக்கு என்ன எடுத்துப் போகிறாய்?'' என்று மற்றவர்கள் அவனைக் கேட்டார்கள்.

*மீத்யாவால் ரகசியத்தை நீண்ட நேரத்திற்குக் காப்பாற்ற முடியவில்லை, ஆகவே அவர்களைக் கடற்கரைக்கு, பைன்மரக் கிளை கிடந்த இடத்திற்கு அழைத்துச் சென்றான்.*

*''பா-ரு-ங்-கள்!'' மீத்யா கத்திக் கொண்டு ஊசிகள் கொண்ட கிளையை உயர்த்தினான். ''காய்ந்து போன ஜெல்லிமீன்கள்!''*

*ஆனால் எங்கே அவை? ஜெல்லிமீன்களுக்குப் பதிலாகப் பத்திரிகையின் மீது நான்கு கரும் புள்ளிகளே இருந்தன — அதே எண்ணிக்கையில் தான் ஜெல்லிமீன்கள் இருந்தன.*

*ஜெல்லிமீன்கள் காய்ந்து போகாது, ஆவியாகிப்போகும் என்பதை மீத்யா எங்ஙனம் அறிந்துகொள்ள முடியும்?*

## புதியவர்

*குழந்தைப் பருவத்தின் உரிமை விளையாட்டுகள். ஆர்தெக்கின் ஓம்புநர்கள் குழந்தைகள். இதன் காரணமாக, உலகத்தில் எத்தனை விளையாட்டுகள் இருக்கின்றனவோ அநேகமாக அத்தனையும் ஆர்தெக் முகாம்காரர்களுக்கு அறிமுகமானவைகளாக இருக்கின்றன. ஏனெனில் பல வேறுபட்ட நாடுகளிலிருந்து சிறார்கள் ஆர்தெக்கிற்கு வருகிறார்கள். தங்களோடு அவர்கள் கொண்டுவரும் பொருள்கள் விளையாட்டுகளும் பாடல்களும். அவர்கள் போய்விடுகிறார்கள், ஆனால் விளையாட்டுகளும் பாடல்களும் தங்கிவிடுகின்றன.*

*குறிப்பாக உடற்பயிற்சி விளையாட்டுகள் ஆர்தெக்கில் பிரபலமானவை. சில நேரங்களில்* **விளையாட்டு உலகம்** *என்றும் முகாமை அழைப்பார்கள்.*

*ஆனால் ஆர்தெக்கில் விளையாட்டுகள் சேர்க்கப்படுவதோடு புதியவைகளும் உருவாக்கப்படுகின்றன. அவற்றில் ஒன்று 'குறிதவறாது சுடுபவன்' என்பது, அது இப்போது உலகம் முழுவதும் விளையாடப்படுகிறது.*

*...நிழல்படித்த களத்தில் இரு ஆட்டக் குழுக்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. சற்று தொலைவு தள்ளி, தோளின் மீது துண்டு ஒன்றைப் போட்டவாறு ஓர் இளைஞர் நின்று விளையாட்டை ஆர்வத்தோடு கவனித்தார். அது எவ்வாறு விளையாடப் பட்டது என்பதைப் புரிந்து கொள்ள முயன்றார். ஒரு வேளை, நீச்சலுக்காகக் கடற்கரைக்குச் செல்கையில் அங்கே நின்றுவிட்டார்.*

*ஒவ்வொரு குழுவிலும் பத்து விளையாட்டாளர்கள் இருந்தனர். ஒவ்வொரு குழுவுக்கும் சொந்தமான எல்லை இருந்தது. ஒவ்வொரு ஆட்டக் குழுத் தலைவனும் விளையாட்டாளர்கள் பின்னே இருக்க வரிசையில் நின்றான். விளையாட்டின் குறிக்கோள் எதிர் ஆட்டக்காரனைப் 'பற்றிப் பிடிப்பது' — பந்தால் அவனை அடிப்பது — பிறகு அவன் குழுத் தலைவனுடைய வரிசையில் நிற்க வேண்டும். எதிர் ஆட்டக்காரன் ஒருவனைப் 'பற்றிப் பிடிப்பதில்' வெற்றியடைந்தால், அவனால் தனது சொந்த இடத்திற்குத் திரும்பிவர முடியும்.*

*அந்த இளைஞர் விளையாட்டு நடக்குமிடத்துக்கு வந்து, தனது துண்டை ஒரு கிளையில் தொங்கவிட்டு விட்டு, தான் சேர்ந்து கொள்ள முடியுமா எனக் கேட்டார். அது விதிகளுக்குப் புறம்பானது, ஆனால் ஆர்தெக்கில், முகாம்காரர்கள் மூத்தவர்களை மதிக்கிறார்கள். அந்த மனிதர் ஒரு விருந்தினராக இருக்க வேண்டும் என ஆட்டக்*

காரர்கள் கருதினார்கள், ஆகவே அவர் விளையாடுவதற்கு ஒப்புக்கொண்டார்கள். தங்களுடைய விளையாட்டைத் தொடர்வதற்கு அவசரப்பட்டதால், அவரிடம் அதிக அக்கறை செலுத்தவில்லை.

அந்தப் புதியவரின் தொடக்கம் அருமையாக இருந்தது, மூன்று ஆட்டக்காரர் களைப் 'பற்றிப் பிடித்தார்', ஒருவன் பின் ஒருவனாக. அவருடைய குழு பெருமகிழ்ச்சி யுற்றது, அதே வேளை எதிர் குழு நிலைகுலைந்து போனது.

புதியவருடைய ஆட்டக் குழு வெற்றி பெற்றதுடன் விளையாட்டு முடிந்து போனது.

மரத்தினின்றும் தனது துண்டை அந்த மனிதர் எடுத்துக் கொண்டு, அந்த விளை யாட்டுக்கு என்ன பெயர் என்று கேட்டார்.

''குறிதவறாது சுடுபவன்,'' என்று சிறார்கள் பதிலளித்தனர்.

''சரியான பெயர்,'' என்று சொல்லி, அவர்களைப் பார்த்துப் புன்னகை செய்து விட்டு, அப்பால் நடந்து போனார்.

குழுத் தலைவர் தோற்றுப் போன ஆட்டக்காரர்களிடம் நடந்து வந்தார்.

''தோற்றுப் போனீர்களா?''

''ஆமாம்,'' அவர்கள் முறுமுறுத்தார்கள்.

''ஏன் இவ்வளவு கவலையாக இருக்கிறீர்கள்?'' என்று குழுத் தலைவர் வியப்புடன் கேட்டார்.

அவர் வியப்படைந்தது ஆட்டக்காரர்களுக்கு விந்தையாகத் தோன்றியது.

''நாங்கள் ஏன் மகிழ்ச்சியாக இருக்க வேண்டும்? நாங்கள் தோற்றுப் போனோம்.''

''ஆனால் நீங்கள் விண்வெளியாளர் யூரி ககாரினிடம் தோற்றீர்கள்!''

''ககாரினா!'' வியப்பையும் மகிழ்ச்சியையும் அவர்கள் முகங்கள் காட்டின. அவருக்குப் பின்னே ஓடினார்கள், ஆனால் அவர் ஏற்கெனவே மறைந்து விட்டார். பிறகு அவரை மறுபடியும் அவர்கள் சந்தித்தார்கள். 'குறிதவறாது சுடுபவன்' ஆட்டத்தின் போதும் வேறு பிற சந்தர்ப்பங்களின் போதும்.

ஏப்ரல் 12, 1961இல் சோவியத் விமானி யூரி ககாரின் விண்கப்பல் வோஸ்தாக்கில் வரலாற்றில் முதலாவதாக பூமியைச் சுற்றிய விண்வெளிப் பயணத்தை மேற்கொண்டார்.

அதற்குப் பிறகு பல ஆண்டுகள் கடந்து விட்டன. ஆனால் ஆர்தெக் இன்னமும் உலகின் முதலாவது விண்வெளியாளரின் விருப்பமான விளையாட்டாகிய 'குறிதவறாது சுடுபவனை'ப் பரிந்துரை செய்கிறது.

## நட்புறவுக் காலநிலை

''இது ஆர்தெக் வானொலி!'' தனது வேலைநாளை ஆர்தெக் வானொலி நிலையம் இவ்வாறுதான் தொடங்குகிறது. அதனது அழைப்பு எழுத்துகள் 'யு-5', அவை சோவியத் யூனியனிலும் வெளிநாடுகளிலும் உள்ள வானொலி அமெச்சூர்களுக்குத் தெரியும்.

ஒருமுறை, ஆர்தெக் வானொலி இயக்குநர் எங்கிருந்து கிரீமியாவுக்கு வந்திருக் கிறார் என வானொலியை முடுக்கிய ஒரு வானொலி அமெச்சூர் கேட்டான்.

''விண்வெளியிலிருந்து,'' இயக்குநர் பதிலளித்தார்.

தன்னைக் கேலி செய்ததாக அந்த வானொலி அமெச்சூர் நினைத்தான்.

''நீங்கள் யார்?'' எனக் கேட்டான்.

'' 'சீதார்' என்ற குழூஉக்குறிப் பெயர் கொண்ட ஒரு விண்வெளியாளன்,'' என பதில் வந்தது. ஆர்தெக் இயக்குநர் கேட்பதற்காக விசையை முடுக்கி, பதிலுக்காகக் காத் திருந்தார். ஆனால் அந்த மனிதன் பேசாமல் இருந்தான். தான் உண்மையில் கிண்டல் செய்யப்பட்டதாக அவன் தீர்மானித்தான். 'சீதார்' என்பது ககாரினுடைய குழூஉக் குறிப் பெயர் என்பது அவனுக்குத் தெரியும், ஆனால் அவன் ககாரினுடன் பேசிக் கொண்டிருப்பதை அவனால் நம்ப முடியவில்லை.

அந்த மனிதன் தனது விசாரணை அட்டையை அனுப்பினான், பதில் அட்டையைப் பெற்ற போது தான் உண்மையில் முதல் விண்வெளியாளருடன் தொடர்புகொண்டி ருந்ததை அறிந்த போது அதிர்ச்சியுற்றான்.

ஆர்தெக் வானொலி நிலையம் குறுகிய அமைப்பன்று. ஒலிபரப்பில் ஆர்வமுள்ள எவருக்கும் அதன் கதவுகள் திறந்தே இருக்கின்றன. ஒரு டிரான்ஸ்மீட்டர் ரிசீவர் அமைக்கப்படுவது அல்லது மோர்ஸ் குழூஉக்குறியை அறிந்து கொள்வது அல்லது ஒலிபரப்பு முறைகளை அறிமுகம் செய்து கொள்வது போன்றவற்றை முகாம்காரர் கள் கற்றுக்கொள்ள முடியும். தேவையான திறமை அவர்களுக்கு இருக்கும் நிலையில், அவர்கள் குரல் ஒலிபரப்பாகும்.

''இது ஆர்தெக் வானொலி! எப்படிக் கேட்கிறது? கேட்பதற்கு விசையைத் திருகி யிருக்கிறேன்.''

''உரக்கவும் தெளிவாகவும் வந்து கொண்டிருக்கிறது!'' பிற குழந்தை வானொலி நிலையங்களின் இயக்குநர்கள் பதிலளிக்கிறார்கள். அவர்கள் வழக்கமாகக் கேட்பது பருவநிலை எப்படி என்பதுதான்.

''அருமை!'' மிக அடிக்கடி சொல்லப்படும் பதில், ஆனால் ஒரு முறை இயக்குநர் எதிர்பாராத பதில் அளித்தார்: ''நட்புறவானது!''

பருவநிலையோடு வழக்கமாக இச்சொல் தொடர்புடையது அன்று என்றாலும், வானொலி இயக்குநர் சொன்னது சரிதான்—ஆர்தெக்கில் காலநிலை எப்போதுமே நட்புறவாகவே இருக்கிறது.

## நல்ல திரைப்படக் காட்சி

ஆர்தெக்கில் நடைபெறும் ஒவ்வொன்றையும் பற்றி பத்திரிகைகளிலும் சஞ்சிகை களிலும் எழுதப்படுகிறது, அல்லது அதுபற்றி வானொலியில் பேசப்படுகிறது, அல்லது திரைப்படங்களிலும் தொலைக்காட்சியிலும் காட்டப்படுகிறது. அதன் எல்லாக் குறிப்புகளையும் அதனுடைய 'நினைவில்', அதாவது திரைப்பட நூலகத்தில், ஆர்தெக் பாதுகாக்கிறது.

**ஆர்தெக்ஃபிலிம்** ஸ்டுடியோவின் இருப்பிடம் முகாமாகும். எந்த ஸ்டுடியோவையும் போல, அதற்கென்று சொந்த வசனகர்த்தாக்களும், இயக்குநர்களும், ஒளிப்பதிவாளர் களும் இருக்கிறார்கள், ஒரே ஒரு வித்தியாசம் எல்லாருமே குழந்தைகள். இளம் வசனகர்த்தாக்கள் எழுதுகிறார்கள், இளம் இயக்குநர்கள் இயக்குகிறார்கள், இளம் ஒளிப்பதிவாளர்கள் படமெடுக்கிறார்கள்.

**ஆர்தெக்ஃபிலிம்** நூலகத்தில் சர்வதேச மற்றும் தேசியக் கூட்டங்கள், விழாக் கொண்டாட்டங்கள், பிரபலமான விருந்தினர்களுடனான சந்திப்புகள், விளையாட்டுப்

போட்டிகள் பற்றிய திரைப்படச் சுருள்கள் உள்ளன.

...பயொனீயர்கள் மூன்றாவது அனைத்து யூனியன் மாநாடு முகாமில் நடைபெற்றது. ஒவ்வொருவரும் மரியாதைக்குரிய விருந்தினர்களின் வருகைக்காகக் காத்திருந்தனர், அவர்களில் ஒருவர் யூரி ககாரின்.

பயொனீயர் மாநாட்டில் சோவியத் யூனியன் முழுமையிலிருந்தும் இளம் பயொனீயர்கள் நிறைந்த எண்ணிக்கையில் கூடுவார்கள். தங்களுடைய சாதனைகள் பற்றி அறிக்கை தந்து எதிர்காலத்திற்கான திட்டங்கள் வகுப்பார்கள். குழந்தைகள் தாங்களாகவே ஏற்பாடு செய்த ஒரு பெரும் இசை நடன நிகழ்ச்சியுடன் மாநாடு முடிவடைகிறது.

விண்வெளியாளர் குழந்தைகளை ஏமாற்றாது, கொண்டாட்டங்களின் போது வந்து சேர்ந்தார். விளையாட்டரங்கத்தில் இருந்த ஒவ்வொருவரும் எழுந்து நின்று ஒருமித்த குரலில் விருந்தினரை வாழ்த்தினார்கள்:

''க-கா-ரின்! க-கா-ரின்!''

பதிலுக்கு விண்வெளியாளர் தனது கைகளை உயர்த்தினார், பிறகு தனது இருக்கையில் அமர்ந்தார். நிருபர்களும் ஒளிப்பதிவாளர்களும், இளைஞர்களும் முதியவர்களும், அவரை நோக்கி விரைந்தார்கள். அவர் குழந்தைகளுடன் கேலிபேசிக் கொண்டும், ஆட்டோகிராபுகளில் கையொப்பமிட்டுக் கொண்டும் இருந்தார். அப்போது ஒரு சிறிய ஒளிப்பதிவாளன் படமெடுக்க கூட்டத்தில் முனைந்து செல்ல முடியாது இருப்பதைக் கவனித்தார்.

''இங்கே வா, சிறுவனே!'' என்று அழைத்தார். ''சிறுவனுக்கு வழி விடுங்கள்.'' தனது கைகளை நீட்டி அந்தப் பையனைத் தன்னை நோக்கி வருமாறு அழைத்தார். சிறுவனோ குழப்பம் அடைந்து, காமிராவைத் தாழ்த்தினான். ஆனால் விண்வெளியாளர் தொடர்ந்து புன்முறுவல் செய்யவும் அவனை அழைக்கவும் செய்தார். சிறுவன் தனது மன அமைதியைத் திரும்பப் பெற்று, தனது காமிராவை உயர்த்தி படமெடுக்கத் தொடங்கினான்.

ககாரின் முறுவலிப்பதையும், சைகை செய்வதையும் அவன் படமெடுத்தான். அந்தத் திரைப்படக் காட்சி ஆர்தெக்கில் காட்டப்படுந்தோறும், அதைப் பார்க்கின்ற சிறுமிகளும் சிறுவர்களும் அவர் தங்களைப் பார்த்து முறுவலிப்பதாக உணர்கிறார்கள்.

## விண்வெளியின் ஒரு சிறு பகுதி

ஆர்தெக்கின் எல்லாக் குறிப்பிடத்தக்க நண்பர்களிலும், ககாரின்தான் விருப்பமானவர். அவர் அங்கு வந்து எல்லாரையும் சந்தித்தது ஒவ்வொருவருடைய மனத்திலும் பசுமையாக இருப்பதோ, ஆர்தெக் விண்வெளிக் கண்காட்சி அமைப்பை அவர் தொடங்கியதோ காரணமாக இருக்கலாம்.

அநேகமாக ஆர்தெக்கிலுள்ள ஒவ்வொரு முகாம்காரனும் கண்காட்சியைப் பார்க்க விரும்புகிறான். சில சிறுவர்களும் சிறுமிகளும் ஒவ்வொரு நாளும் அங்கு போக முயல்கின்றனர். கண்காட்சி ஒரு வகுப்பறை போலவும் பயன்படுகிறது. அதனால்தான் இளம் முகாம்—விண்வெளியாளர்கள், 'எங்கே', 'எதற்காக' என்ற குழுத் தலைவர்களுடைய வினாக்களுக்கு ''விண்வெளியில் பயிற்சி பெறுவது'' என்று விடையளிக்கும் போது மிகைப்படுத்திச் சொல்வதில்லை.

*விண்வெளி வகுப்பறையில் சிறார்கள் உண்மையாகவே பாடுபட வேண்டியிருக்கிறது. விண்வெளி நாற்காலியில் 45° கோணத்தில் சுற்றிச் சுழன்ற பிறகு விரைவில் குதித்து நின்று ஒரே சீராகப் பெயரைக் கையெழுத்திடவோ, விளக்க வரைபடங்களைச் சரியாக வரையவோ முயல வேண்டும். அல்லது உங்களுடைய செயல்பாட்டு நினைவாற்றலை ஒரு விஷேடக் கருவியில் சோதிக்க வேண்டும் – ஒரு பொருளிலிருந்து மற்றொரு பொருளுக்கு உங்களுடைய கவனத்தைப் பெரும்பாலும் அக்கணமே மாற்றிக் கொள்ள முடியுமா?*

*சென்ட்ரிஃபியூஜ் ஒருவருக்கான ஒரு சிறிய குடைராட்டினம் போன்றது. அது ஒரு பொம்மை போலக் காணப்படுகிறது, ஆனால் அது சுற்றிச் சுழலத் தொடங்கும் போது அது விளையாட்டாக இருக்காது. அதில் சுற்றிச் சுழல்கிற மனிதனின் எடையானது ஏழு அல்லது எட்டு நிமிடங்களில் ஏழு அல்லது எட்டு மடங்கு பெருகிறது! இதற்கிடையில் சென்ட்ரிஃபியூஜ் குழந்தைகளுக்கானதன்று. அதற்குள்ளாக அநுமதிக்கப்பட முடியாத அளவுக்கு அவர்கள் மிகச் சிறியவர்கள். படிப்பு நோக்கத்திற்கான கண்காட்சியின் ஒரு பொருள் அது, பயிற்சி செய்வதற்கன்று.*

*கண்காட்சியில் வைக்கப்பட்டுள்ள பொருள்களில் நிசமானவை ஏராளம் இருக்கின்றன, வேறு அருங்காட்சியகங்களில் அவற்றைக் காண முடியாது. எடுத்துக்காட்டாக, சோவியத் விண்கப்பல்* **வோஸ்தாக்**_கிலிருந்து கொண்டு வந்த நாற்காலி, முதலாவது விண்வெளியாளர் யூரி ககாரின் இறங்குவதற்குப் பயன்பட்ட பராசூட், அவருடைய பயிற்சி உடைகள், விண்வெளிக்கு அனுப்பப்பட்ட முதலாவது சோவியத் ராக்கெட்டுகளில் ஒன்று. மேலும் சந்திரனிலிருந்து திரும்பவும் மண்ணைக் கொண்டு வந்த சோவியத்_ **லூனாஹோட்-1** *(சந்திர வாகனம்) வடிவமைப்பு, விண்வெளியாளர்களின் படங்கள், பூமியும் சரி, விண்வெளிப் பயணத்திலும் சரி. கண்காட்சி கூடங்கள் ஒன்றில் சூரிய உதயத்தைப் போல மிகவும் மெல்லிய ஒளி இருக்கிறது. ஆச்சரியமடைந்த பார்வையாளர்களுக்கு முன்னே அகிலம் விரிகிறது, ஒரு மனிதன் அங்கே மிதந்து கொண்டிருப்பது காணப்படும். அவர் புகழ்பெற்ற சோவியத் விண்வெளியாளர் அலெக்சேய் லியோனவ், விண்வெளியில் நடந்த முதலாவது மனிதர்.*

*அர்மீனியாவைச் சேர்ந்த அஷோத் சகத்திலியானை அநுமதித்தால் அவன் கண்காட்சியில் பகலையும் இரவையும் செலவிடுவான். தனது குழுவைச் சேர்ந்த ஒவ்வொருவரிடமும் விண்வெளியாளனாகும் தனது கனவு பற்றிச் சொன்னான். அவனுடைய நண்பன் நிகீதாவைத் தவிர, எல்லாருமே உற்சாகமூட்டிப் பேசினார்கள். நிகீதாவோ ஐயுறவு காட்டினான்.*

*ஒருநாள், இரு பையன்களும் பயொனீயர் மாளிகையின் குளிர்ச்சியான அறைகளை விட்டு, தாங்கள் ஒரு விண்கப்பலின் காப்டன் ஆவது பற்றிக் கற்பனை செய்தவாறு கடும் வெயிலில் நடந்தார்கள். அவன் நண்பனின் துயரமான குரல் அவனை இந்த உலகத்திற்குத் திரும்பக் கொண்டு வந்தபோது, அஷோத் ஏற்கெனவே எங்கோ பெருங் கரடி விண்மீன் கூட்டத்தில் இருந்தான்.*

*''அருத்தமற்ற கனவுகள்,'' என்று அஷோத்தை அரைகுறையாகப் பார்த்தவாறு பெருமூச்சு விட்டான்.*

*''ஏன் அருத்தமற்றது?'' கோபமாக அஷோத் கேட்டான்.*

*''ஏனெனில் கிட்டப்பார்வையுள்ள ஆட்களை விண்வெளியில் பறக்கவிடுவது இல்லை,'' என்று விரைந்து விடையளித்தான்.*



ஆர்தெக் முகாம்காரர்களுடன் யூரி ககாரின்.
விண்வெளிக் கண்காட்சி.







அஷோத் எந்திரகதியில் தனது கண்ணாடியைத் தொட்டான், ஆனால் அவன் விட்டு விடுவதாக இல்லை.

''நான் மேன்மேலும் படிப்பேன், போதுமான அளவுக்கு நான் கற்றதும், ஒரு மாத்திரை கண்டுபிடிப்பேன்,'' என்றான்.

''என்ன மாதிரியான மாத்திரை?'' நிகிதா ஆர்வத்தோடு கேட்டான்.

''கிட்டப்பார்வையைக் குணப்படுத்தும் ஒரு மாத்திரை!'' அஷோத் அறிவித்தான். ஆர்தெக்கில், ஒவ்வொன்றும் சாத்தியமானது போலவே அவனுக்குக் காணப்பட்டது.

## அதிசய வரைபடம்

ஆர்தெக்கில் முகாம்காரர்களின் மிகச் சிறிய குடும்பம் பயொனீயர் பிரிவு என்பது, அடுத்தது குழு, மிகப் பெரியது அணி. இவற்றில் மிக முக்கியமானது குழு. ஒரு குழுவைச் சேர்ந்த சிறார்கள்





எல்லாவற்றையும் ஒன்று சேர்ந்து செய்கிறார்கள். நடைப் பயணம் செய்கிறார்கள், ஆட்டமாடுகிறார்கள், போட்டிகளும் இசை நடன நிகழ்ச்சிகளும் நடத்துகிறார்கள், தங்களுடைய திறமைகளையும் ஆற்றல்களையும் மற்றவர்களுக்குக் காட்டுகிறார்கள்.

ஒரு குழுவின் வாழ்வில் முக்கியமான நிகழ்ச்சி குழுக் கூட்டம். அவை முறையாகவும், அவசரமாகவும் நடக்கும் கூட்டங்கள். முதல் வகைக்குத் தயாரிக்க குழந்தைகளுக்குப் போதிய நேரம் இருக்கிறது, இரண்டாவது வகைக்கு, தயார் செய்ய நேரம் இருப்பதில்லை. எக்காளம் முழங்கிட, குழு வரிசைகளில் நின்று கூட்ட இடத்திற்குச் செல்கிறது. அவர்கள் செல்லும் போது, எங்கே, எதற்காகப் போய்க் கொண்டிருக்கிறார்கள் என்பது குறித்து முகாம்காரர்கள் ஊகிக்கத் தொடங்குவார்கள். ஒருகால் விண்வெளியாளர்களைச் சந்திக்கலாம்? அல்லது புயலின் போது கடற்கரையருகே நீந்திப் போகுமாறு கட்டாயப்படுத்தப்பட்ட டால்பின்களைக் காப்பாற்றலாம்? எதுவாக இருந்தாலும் அவர்கள் தயாராக இருக்கிறார்கள். ஆர்தெக் முகாம்காரர்கள் ஏற்கெனவே நிறையச் செய்து விட்டார்கள். தீங்கு செய்யும் பூச்சிகளிடமிருந்து திராட்சைப் பயிர்களைக் காப்பதற்கு உதவினார்கள், விண்வெளியாளர்களைச் சந்தித்தார்கள், தொல்லையிலிருந்து டால்பின்களைக் காப்பாற்றினார்கள்.

...தொடரின் முடிவு நெருங்கி வந்தது. **பெருங்கடல்** முகாமின் ஒரு குழு ஒன்றாக அழைக்கப்பட்டு, புறப்பட்டது. எங்கு, எதற்காகச் சென்றார்கள் என்று யாருக்கும் தெரியாது, சிறிது தூரம் நடந்த பிறகு, கோடைக் கால அரங்கிற்கு, குழுக் கூட்டங்

களுக்கு ஏற்ற இடத்திற்கு வந்தார்கள். ஆனால் அன்றையநாள் வித்தியாச மானதாகக் காணப்பட்டது: எல்லாச் சுவர்களும் தூய்மையான, நீளமான வெள்ளைத் தாளால் மூடப்பட்டி ருந்தன. அவற்றின் மீது படங்கள் இருந்திருக்குமேயானால், ஒரு கண் காட்சியைப் பார்ப்பதற்காக அவர்கள் அழைக்கப்பட்டிருக்கிறார்கள் என்பது தெளிவாகி இருக்கும்.

எதற்காக வெறுமையான துண்டுத் தாள்கள் வைக்கப்பட்டிருந்தன, எதற் காக மேசைகளின் மீது வர்ணத் தொகுதிகளும், தூரிகைகளும் வைக் கப்பட்டிருந்தன? ஒருகால் ஓர் ஓவியர் ஆர்தெக்கிற்கு வந்து அவர்களுக் காக ஏதேனும் ஓவியம் வரையக் கூடும்.

ஆனால் குழுப் பிரதிநிதிகளின் தலைவன் சீக்கிரமே எல்லாவற்றையும் தெளிவுபடுத்தினான்.

''இப்போது ஒரு சுவர்த்தாள் போட்டி நடைபெறப் போகிறது. அது 'அதிசய வரைபடம்' என அழைக்கப் படுகிறது,'' என விளக்கினான். ''போட்டியின் பொருள் '2000 ஆண்டில் ஆர்தெக்.' ''

சிறார்கள் தூரிகைகளையும், வர் ணங்களையும் எடுத்துக் கொண்டு வெற்றுக் காகிதத்தின் முன்னர் நின் றார்கள். எல்லாவகையான எதிர்கால படங்களைப் பற்றியும் அவர்கள் சிந்தித் தார்கள். ஆனால் அது பற்றிச் சிந்தித்து அவர்களின் அருகிருந்தவர் களைப் பக்கவாட்டில் பார்த்தார்கள். தோனியாவுடைய தாளின் வரையரை யைக் கொண்டு மதிப்பிட்டால், அதலாரி எனப்பட்ட இரட்டைச் செங் குத்துப்பாறைகளை அவள் வரைந்து கொண்டிருந்தாள். செங்குத்துப் பாறை கள் உண்மையில் அழகாக இருந்தன.



இயற்கையினுடைய ஓவியர்கள் இருவர் — கடலும், காற்றும் — அவற்றை அற்புதமாகப் படைத்திருந் தனர். ஆர்தெக்கைச் சுற்றி நடந்து வந்த போது, குழு அடிக்கடி அவற்றைப் பார்த்துப் புகழ்ந்திருக் கிறது. ஆனால் அவற்றுக்கும் எதிர்காலத்திற்கும் என்ன சம்பந்தம்? இப்போது உள்ளது போலவே அதலாரி எப்போதும் இருக்கும். எதிர்காலம் என்பது விண்வெளி, கோள்கள், நட்சத்திரங்கள்... ஆனால் தோனியா பூமியினுடைய அதலாரியை வரைந்து கொண்டிருந்தாள். பெரும்பாலும் அவள் கம்பி களுடன் கூடிய ஓரிரு பால்கனிகளைச் சேர்க்கலாம், ஆகவே நீங்கள் நீரில் விழமாட்டீர்கள். இல்லை, அவர்கள் ஆர்தெக்கினுடைய எதிர்காலத்தை வித்தியாசமானதாக வரைவார்கள்...

நீண்ட காலத்திற்கு முன்னால் வாழ்ந்த இரட்டைச் சகோதரர்களின் கதையை வயதானவர்கள் சொல்கிறார்கள். இரட்டையர்களான ஒரு சகோதரிகளிடம் அவர்கள் காதல் கொண்டார்கள். சகோதரர்களிடம் ஒரு மந்திரப் பெட்டகம் இருந்தது. அது உயரே வானத்திலும் கீழே ஆழ்கடலிலும் என்ன நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என்பதைப் பற்றிச் சொல்லும். அந்தப் பெட்டகத்தை ஒரு மாயாவி அவர்களுக்குத் தந்து, பயங்கரமான ஆபத்தால் மக்கள் அச்சுறுத்தப்பட்டால் மட்டுமே அவர்கள் அதைத் திறக்க வேண்டும் எனவும், தகுந்த காரணமின்றி ஒருபோதும் திறக்கவே கூடாது எனவும் கூறினார். சகோதரர்கள் அதைச் செவிமடுக்கவில்லை. ஒரு நாள், வீண் ஆர்வம் காரணமாக உயரே வானத்திலும் கீழே ஆழ்கடலிலும் என்ன நடைபெற்றுக் கொண்டிருக்கிறது என் பதைக் காட்ட பெட்டகத்தை அவர்களும் சகோதரிகளும் திறந்தார்கள். அவர்கள் எல்லாரையும் கல்லாக மாற்றித் தண்டித்தார் மாயாவி. இவ்வாறுதான் அதலாரி செங்குத்துப் பாறைகள் தோன்றின.

முகாம்காரர்கள் எல்லாவகையான விஷயங் களைப் பற்றியும் சிந்தித்தார்கள் — ஆர்தெக்கிலிருந்து செவ்வாய்க்கும் வெள்ளிக்கும் பறக்கும் ராக்கெட்டு கள், ஆர்தெக் விண்வெளியாளர்கள் புற வெளியில் மிதப்பது, இளம் செவ்வாய்க் கோள் வாசிகள் ஆர்தெக்கிற்கு வருதல்; நிலவில் ஆர்தெக் இருப்பது. ஆனால் தோனியா தொடர்ந்து இரட்டைச் செங் குத்துப் பாறைகளை வரைந்தாள், முடிந்த படத்தை சிறார்கள் பார்த்தபோது, அதை விட்டுத் தங்களது கண்களை அவர்களால் எடுக்க முடியவில்லை.

செங்குத்துப் பாறைகள் இருக்க வேண்டிய இடத்தில் இருந்தன, ஆனால் நீருக்குக் கீழாக



ஒரு செங்குத்துப்பாறையிலிருந்து மற்றொன்றுக்குச் செல்ல ஒரு கண்ணாடி நடைபாதை இருந்தது. அதன் வழியாக சிவப்பு டைகள் அணிந்த சிறார்கள் நடந்து சென்றார்கள். கடலின் எல்லாவகையான உயிரினங்களும் அதைச் சுற்றிலும் நீந்தின. அதலாரியின் உச்சிகளுக்குப் போக ஒளி ஊடுருவும் மின்னுகின்ற தண்டுகளில் லிஃப்டு கள் இருந்தன.

போட்டியில் தோனியா வெற்றி பெறுவாள் என்பது குறித்து யாருடைய மனத்தி லும் சந்தேகமே இல்லை—அவ்வாறே வென்றாள்.

பரிசைப் பெற்றுக் கொண்ட பிறகு, தனது படத்தின் பின்பக்கத்தில் எல்லாக் குழுவினர்களையும் கையெழுத்திடுமாறு தோனியா கேட்டாள்.

## பாடல் எழுதப்பட்டது எப்படி

அன்றைய தினம் ஆர்தெக்கில் எல்லாமே கிளர்ச்சியற்று இருந்தன—வானம், கடல், கரடி மலை கூட. வானம் மேக மூட்டமாய் இருந்தது, அவ்வாறு ஏற்படுவது மிகவும் அபூர்வம், கடல் கோபக்குறியுடன் காணப்பட்டது, முகாம்காரர்களால் பரிமாறிக் கொள்ளப் படுகின்ற துயரமான பிரியாவிடைகளைக் கேட்கக் கூடாது என்பதற் காகத் தனது தலையை மூடுபனியில் மறைத்துக் கொண்டது போல கரடி மலை இருந்தது. குழந்தைகளை வீடுகளுக்கு எடுத்துச் செல்கிற பஸ்களை எந்த நிமிடமும் எதிர்பார்த்திருந்தனர்.

வித்யா முஸாதவுடைய பிரிவு கூடாரமண்டபத்தில் உட்கார்ந்திருந்தது, யாரும் ஒரு வார்த்தையும் பேசவில்லை. நண்பர்களிடம் பிரியாவிடை சொல்லிக் கொள்ள இருக்கும் போது பேச எதையாவது கண்டுபிடிப்பது சிரமமானதாக இருந்தது.

''எதையாவது பாடினால் என்ன?'' ஸோயா திமஃபேயெவா கேட்டாள்.

''எதைப் பற்றி?'' ருஸ்லான் பப்கோவ் கோபத்தோடு முகஞ்சுளித்தான். ''எல்லாமே பாடப்பட்டும் திரும்பப் பாடப்பட்டும் விட்டன.''

''சரி, பிறகு ஒரு புதிய பாடல் பற்றி நாம் சிந்திக்கலாம்,'' ஸோயா ஆலோசனை சொன்னாள்.

''ஆ-கா-கா,'' ருஸ்லான் கேலி செய்தான். ''அவள் பாடல் எழுதுபவள் என்று நினைக்கிறாள்.''

ஆனால் யாரும் சிரிக்கவில்லை, குழம்பிப் போன ருஸ்லான் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை.

மீண்டும் அமைதி நிலவியது. பிறகு திடீரென்று, அமைதிக்கிடையில் யாரோ மெதுவாகப் பாடத் தொடங்கினான்:

ஆர்தெக்கில் புனைந்தோம் இன்று
இச் சிறு பாடலை நன்று,
இச் சிறு பாடலை நன்று...

லேனா ஸகரூய்கோ பாடிக் கொண்டிருந்தாள். ஒவ்வொருவரும் காதுகளைத் தீட்டிக் கொண்டார்கள்.

''எதைப் பற்றிய பாடல்?'' வித்யா முஸாதவ் கேட்டான்.

''இன்னமும் எனக்குத் தெரியாது,'' என்றாள் லேனா.

''எனக்குத் தெரியும்!'' பேத்யா கர்புசேவ் திடீரென்று சொன்னான், பாடுகின்ற குரலில் தொடர்ந்தான்:

எப்படி நாமும் முகாமிலே
இப்படி ஆனோம் நண்பராய்
எப்படி இங்கே வசித்தோம்
என்பது பற்றி நினைத்தோம்!

''மிகவும் நல்லது,'' என்ற வித்யா பிறகு பாடினான்:

ஆர்தெக்கில் புனைந்தோம் இன்று
இச் சிறு பாடலை நன்று,
இச் சிறு பாடலை நன்று,
எப்படி நாமும் முகாமிலே
இப்படி ஆனோம் நண்பராய்
எப்படி இங்கே வசித்தோம்
என்பது பற்றி நினைத்தோம்!

''ஹேய், அது மிக நன்றாக வருகிறது!'' உணர்ச்சிவயப்பட்டு மாஷா கத்தினாள். மேலும் தொடர்ந்தாள்:

நீந்தியது எப்படி, மண்வீடு
கட்டியது எப்படி என்றே!
பழுப்பு நிறமதை நாமும்
பாங்குறப் பெற்றது என்றே!

''அடுத்து என்ன?'' என்றான் ருஸ்லான்.

''எனக்குத் தோன்றிவிட்டது,'' என்றான் கால்பந்தாட்டப் பிரியன் மீத்யா அர்ஹீப்பவ்.

கதிரவன் மறையும் வரை,
கதிரவன் மறையும் வரை
கால்பந்து தனையே நாமும்
களிப்புற ஆடியது என்றே!

ஒவ்வொருவரும் ஒளிர்வூட்டினார்கள். ஒவ்வொருவரும் தங்களை ஒரு கவிஞனாக உணர்ந்தார்கள். பாடலுக்குத் தங்களுடைய வரிகளைச் சேர்க்க ஒவ்வொருவரும் முந்திக் கொண்டார்கள்., பிரிவுத் தலைவன் வித்யாவும் பாடலுக்குப் பங்களிக்க விரும்பி பாடினான்:

அன்புடனும் நட்புடனும் நாமும்
அழகுற வாழ்ந் தோமிங்கு!
என்றும் வாழ்வோம் இப்படி,
என்றும் வாழ்வோம் இப்படி.

''நான் சொல்வதைக் கேளுங்கள்!'' வெட்கப்படும் காலியா மலினோவ்ஸ்கயா கத்தினாள். அது அத்தனை வழமையற்றதாக இருக்கவே, பேசுவதை எல்லாரும் நிறுத்தினார்கள். பிரிவில் மிகவும் அமைதியான நபர் காலியாதான். ஆனால் இப்போது அவளுங் கூட பாடலை எழுதுவதில் ஈடுபட்டாள்.

''பேசு,'' என்றான் வித்யா.

காலியா முகஞ்சிவந்து பாடினாள்:



சிறுமிகள் இன்றி இளம்
சிறுமிகள் இன்றி எங்கும்
சிறுவர்கள் சென்றது இல்லை.

வித்யா தொடர்ந்தான்:

பிரிகிற நேரமும் வந்தது,
பின்னும் கவலையும் தந்தது.

மாஷா பாடினாள்:

பாடவும் நானே எண்ணினேன்,
பிரிவினை நீளவும் எண்ணினேன்.

மீத்யா கத்தினான்:

அரியஎன் நண்பரீர் அந்தோ

லேனா கடைசி வரியைச் சேர்ந்தாள்:

பிரிவோம் இனிய நினைவுடன்!

''ஐயோ!'' என்றான் பிரிவுத் தலைவன் திடீரென்று. ''ஒரு பெரிய பாட்டை நாம் தயாரித்து விட்டோம், அதை எழுது வதற்கு மறந்து விட்டோம்!''

''என்ன சொல்கிறாய், நாம் மறந்து விட்டோம்?'' பிரிவின் குறிப்பெழுதும் செயலன் கிரீஷா கிராஸ்நோவ் கூறினான், ''இதோ நம்முடைய பாட்டு!'' 'பிரிவு நாள்குறிப்பு' என்ற தலைப்பிட்ட குறிப்பேட்டை அவன் நீட்டினான்.

''முதலிலிருந்து வாசி,'' என்றான் வித்யா.

கிரீஷா படித்தான்:

...நீந்தியது எப்படி, மண்வீடு
கட்டியது எப்படி என்றே!
பழுப்பு நிறமதை நாமும்
பாங்குறப் பெற்றது என்றே!
கதிரவன் மறையும் வரை,
கதிரவன் மறையும் வரை
கால்பந்து தனையே நாமும்
களிப்புற ஆடியது என்றே!
அன்புடனும் நட்புடனும் நாமும்
அழகுற வாழ்ந் தோமிங்கு!..

''நாம் எல்லாருமாகச் சேர்ந்து பாடலாம்!'' வித்யா கத்தினான்.

குழந்தைகள் பாடிக்கொண்டிருந்த வேளையில், இயற்கை ஓர் அற்புதமான முறையில் மாறியது. சூரியன் பிரகாசிக்கத் தொடங்கியது; கடல் முறுவலிப்பது போலக் காணப்பட்டது; மூடுபனி மறைந்து விட்டது; கரடி மலை தனது தலையை உயர்த்தி துக்கமிக்க பிரியாவிடை கூறுவது பற்றிய மகிழ்ச்சிமிக்க பாடலைக் கேட்டுக் கொண்டிருப்பது போல இருந்தது.

